னது நுகர்ந்திடும் பித்தர்சொற் றெளியாமே—யத்த னுண்டு தன் னடியரிற் கூட்டிய வதிசயங்கண்டாமே” எனவும் அதனையறிந்த பெரியோர் கூறியவாற்றானறிக. எனவே திருமுருகாற்றுப்படை யென்பதற்கு, முத்தியைப் பெற்றவ னொருவன் பெறுதற்குப் பக்குவனாகிய ஓரிரவலனைப் பெறப் பொருட்டு ஸ்ரீ சுப்பிரமணியசுவாமியிடத்தே வழிப்படுத் தலையுடைய பிரபந்தமெனப் பொருள் கூறுக.

---

# திருப்பரங்குன்றம்.

## இணைக்குறளாசிரியப்பா.

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோள் முகந்த கமஞ்சூன் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்ளுறை சிதறித்
தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்
திருள்படப் பொதுளிய பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கோபத் தன்ன தோயாப் பூந்துகிற்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி
னாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த விணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்

தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதி னொள்ளிண ரட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்
பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா மரன்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவே
லுலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்

கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்
டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
யொண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித் தோள்பெயரா
நிணந்தின் வாய டுணங்கை தூங்க
விருபே ருருவி னொருபே ரியாக்கை
யறுவேறு வகையி னஞ்சுவர மண்டி
யவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
மாமுத றடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுடன்
னன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
வின்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
றிருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயி
னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்த லூதி யெற்படக்

*கண்போன் மலர்ந்த காமர் சுனைமல*
*ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்*
*குன்றமர்ந் துறைதலு முரியன தா அன்று.*

## இதன்பொருள்.

உலகம் என்பது முதல் கணவன் என்னும் வரையும் ஒருதொடர்.

உலகம் உவப்ப ஏர்பு வலன் திரிதரு பலர் புகழ் ஞாயிறு கடல் கண்டு ஆங்கு - ஆன்மாக்கள் மகிழும்படி எழுந்து (மகாமேரு கிரியைப்) பிரதக்கிணஞ் செய்யும் பல சமயத்தாரும் புகழும் சூரியன் கடலினிடத்தே காணப்பட்டாற் போல,

வலனேர்பு திரிதரு என்பதனை ஏர்புவலன் திரிதரு என மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது. பலரும் என்பதன்கணும்மை விகாரத்தாற்றொக்கது. காணப்பட்டு என்றபாலது செயப்பாட்டு வினைப்பொருளுணர்த்தும் படுவிகுதி குன்றிக் கண்டு என நின்றது; "இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு— நல்லாற்றி னின்ற துணை" என்னுந் திருக்குறளினுள் "எனப்படுவான்" என்றபாலது "என்பான்" என்றாய வாறுபோல. இவ்வாறு வருவனவற்றை வடநூலார் நயக்கு என்பர். கண்டால் என்னும் வினையெச்சம் கண்டு எனத் திரிந்து நின்றது.

ஓ அற இமைக்கும் அவிர் ஒளி - (இருவகை இந்திரியங்களும் தாங்கள் செல்லுதற்கு உரிய பொருளினிடத்தே) சென்று தங்குதலில்லையாகும்படி கண்களைமூடி (மனசினாலே) பார்க்கப்படும் பிரகாசிக்கின்ற ஒளியையும்,

சேண் விளங்கு ஒளி - (கண்ணினாலே பார்க்கிறவர்களுக்குத்) தூரத்திலே விளங்குகின்ற ஒளியையும்,

ஓவற இமைக்குஞ் சேண்விளங்கவிரொளி என்பது ஓவற இமைக்கும் அவிரொளி எனவும் சேண்விளங்கொளி எனவும் பிரித்துக் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. ஓ என்பது முற்றுப் பெறாத தொழிற்பெயர். இருவகை யிந்திரியங்களாவன ஞானேந்திரியமைந்தும் கர்மேந்திரியமைந்துமாம். இமைத்தல் கண்களின் இருபுனிமையையும் மூடுதல். இமைக்குமென காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஞாயிறு கடற்கண்டாங்கு ஓவற இமைக்கும் அவிரொளி என்றும் வாக்கியம் தனையாக கண்டால் நோக்குவோரது அகப் புறவிருள் நீக்கும் ஞாயிறு யனபோலத் தம்மை மனத்தால் நோக்குவோருடைய அகவிருளை நீக்கும் ஒளி எனப் பொருள் படுதலால் தொழிலுவமையும். ஞாயிறு கடற்கண்டாங்கு சேண்விளங்கொளி என்னும் வாக்கியம் பசுநிறத்தையுடைய கடலினிடத்தே விளங்கும் செந்நிறத்தையுடைய சூரியனைப்போலப் பசுநிறத்தையுடைய மயிலின் மீதே விளங்கும் செவ்வொளியினையுடையவர் எனப் பொருள்படுதலால் பண்புவமையும், கொள்ளக் கிடந்தமை காண்க.

உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன்றாள் - தம்மை அடைந்த அன்பர்களைப் (பிறவிக் கடலிலே விழாமல்) தாங்கும்பொருட்டு (அவர்களிடத்துள்ள) அறியாமையைக் கெடுக்கும் வலிமையாகிய பாதத்தையும்,

செறுநர்த் தேய்த்த செல் உறழ் தடக்கை - பகைவராகிய அசுரர்களை வதைத்த இடியைப்போலும் பெருமையாகிய கையையும் உடைய,

மறு இல் கற்பின் வாணுதல் கணவன் - குற்றம் இல்லாத கற்பினையுடைய தெய்வயானையம்மைக்கு நாயகரும்,

கற்பாவது நாயகனிற்சிறந்த தெயவம் இல்லை எனவும் அவனை இப்படி வழி படுக எனவும் தந்தை தாயரும், அந்தணரி

டத்தும் சான்றோரிடத்தும் ஆசாரியரிடத்தும் கடவுளைச் சுட்டியும் ஒழுகும் ஒழுக்கம இவ்வாறு என நாயகனும் கற்பித்தவழி நிற்றலாம். வாணுதல் என்பது ஒளியாகிய நெற்றியை உடையாள என விரிதலால், பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. தெய்வயானை முருகக்கடவுளுக்குக் கரியாசத்தி என்க. ஒளியையும் பாதத்தையும் கையையும் உடைய நாயகா என முடிக்க.

## கார்கோள் என்பது முதல் மார்பினன் என்னும் வரையும் ஒரு தொடர்.

கார்கோள் முகந்த கமம் சூல் மா மழை - கடலினிடத்தே முகந்ததனால் உண்டாகிய நிறைவினையுடைத்தாகிய சூலினையுடைய பெரிய முகில்கள்,

காரினாலே கொள்ளப்படுதலால் (முகக்கப்படுதலால் என்றபடி) கடல் கார்கோள் எனப்பட்டது. அதனுள் கோள் என்பது கொள்ளப்படுவது என்னும் பொருட்கண் செயப்படுபொருண்மை உணர்த்தும் ஐ விகுதி புணர்ந்து, தொல்காப்பியத்து எச்சவியலில் "செய்யா யென்னு முன்னிலை வினைச்சொற்—செய்யென் கிளவி யாகிட னுடைத்தே" என்னும் ௫௯-ம் சூத்திரத்து மொழிந்தபொருளோ டொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தல் என்னும் யுத்தியினால் ஐ விகுதி கெட்டு, கெட்டவழி முதல் நீண்டு கோள் என வந்தது. இச்சூத்திரத்துக்கு, செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்—செய்யாய் என்னும் (வாய்பாட்டு) முன்னிலையேவலொருமையெதிர்கால வினைமுற்றுச்சொல்—செய என்கிளவி ஆகு இடன் உடைத்து—(ஆய் என்னும் விகுதிகெட்டுச்) செய் என்னும வாய்பாட்டுச் சொல்லாய் நிற்கும் இடத்தை உடைத்து எனப் பொருள் கூறுக. வடநூற் கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையரும் இவ்வாறே உரைத்தார்.

வாள் போழ் விசும்பின் வள் உறை சிதறி - சந்திர சூரியர்கள் (இருளை) நீக்கும் ஆகாயத்தின் கண்ணே நெருக்கமாகிய துளிகளை (முற்படச்) சிதறி,

ஒளியெனப் பொருள்படும் வாள் என்பது அதனையுடைய சந்திர சூரியர்களுக்கு ஆயினமையால், ஆகுபெயர்.

தலைப்பெயல் தலைஇய தண் நறுங் கானத்து-(கார்காலத்து) முதற் பெயலைப் பெய்து விட்ட குளிர்மையையுடைய வாசனை பொருந்திய காட்டினிடத்தே,

தலையல் என்பதற்கு இப்பொருள் திவாகரத்திலே தெய்வப்பெயராத தொகுதியில் "தலைய லென்பது மழைபெய்து விடுதல்." என்னும் கசகூ-ம் சூத்திரத்தால் அறிக.

இருள் படப் பொதுளிய பராரை மராஅத்து - இருள் உண்டாகும்படி தழைத்த பருமையாகிய அரையினையுடைய செங்கடம்பினது,

உருள் பூந்தண்டார் புரளும் மார்பினன் - தேருருள் போலும் (வட்டமாகிய) பூவினாலே தொடுக்கப்பட்ட குளிர்மையாகிய மாலை அசையும் மார்பினையுடையவரும்,

உருள்பூ என்பது உவமைத்தொகையாதலால், தொல்காப்பியத்தில் புள்ளிமயங்கியலிலே "அல்வழி யெல்லா முறழென மொழிப" என்னும் கoகூ-ம் சூத்திர விதிப்படி உருள்பூ உருட்பூ என உறழ்ச்சி முடிபெய்தும்.

## மால்வரை என்பது முதல் சென்னியன் என்னும் வரையும் ஒருதொடர்.

மால் வரை நிவந்த சேண் உயர் வெற்பில் - பெருமையாகிய மூங்கில்கள் வளர்ந்த தேவருலகம் வரைக்கும் உயர்ந்த மலையின்கண்ணே,

கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடி - சிறுசதங்கை சூழ்ந்த ஒள்ளிய சிவந்த சிறிய அடியிணையும்,

கணைக்கால் - திரண்ட காலிணையும்,

வாங்கிய நுசுப்பின் - வளைந்து நுடங்கிய இடையினையும்,

பணைத்தோள் - மூங்கில்போலுந் தோளிணையும்,

கோபத்து அன்ன தோயாப் பூந்துகில் - இந்திர கோபத்தைப்போன்ற நிறம் பிடியாத (இயற்கைச்சிவப்பையுடைய) பொலிவாகிய புடைவையையும்,

தெய்வத்தின் ஆணையால தானே சிவந்திருத்தலில், தோயாத் துகில் என்றார்.

பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல் - பல இரத்தினங்கள் கோத்த இரண்டு வடத்தினை உடைத்தாகிய காஞ்சியை அணிந்த அல்குலையும்,

இருகோவை உடையது காஞ்சி என்பது "எண்கோவை மேகலை காஞ்சி இருகோவை—பண்கொள் கலாபமிரு பதொன்று - கண்கொள்—பருமம் பதினென்கு முப்பத திரண்டு—விரிசிகை யென்றுணரற் பாறறு" என்னும் வெண்பாவால் அறிக.

கை புனைந்து இயற்றாக் கவின் பெறு வனப்பின் - ஒருவர் கையினாலே சிறப்பித்துப் பிறப்பியாத அழகைத் (தமக்கியல்பாகப்) பெற்ற அழகினையும்,

மானுடப் பெண்களுக்குச் செயற்கையால் வந்த அழகு போலாகாது தெய்வத் தன்மையால் இயல்பாகப் பெற்ற அழகையுடையவர் ஆதலால், கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பு என்றார்.

நாவலொடு பெயரிய பொலம்புனை அவிர் இழை - (சாம்பூநதம் என்று) நாவலோடு அடுத்துப் பெயர்பெற்ற பொன்னினாலே நிருமிக்கப்பட்டு விளங்கும் ஆபரணங்களையும்,

ஆடகம் கிளிச்சிறை சாதரூபம் சாம்பூநதம் என்னும் நால்வகைப் பொன்களுள் சிறந்தது சாம்பூநதமாதலால், அதனை எடுத்துக் கூறினார். அது "புலிநிறக் குருதி தாமரையே பொன்னுருவச் சாம்பூநத—மாவின் கருமுகிற் பாம்பின் கமருமப—சேவல் தீருவ வெண்சிறைக் கெண்டையே—பாலிற்கு வெண்ணெய்யாம் பொன்பா." என்னும் கவிராசப் பெருந்தேவனார் வாக்கால் அறிக. மேருவிற்கு அப்பால் ஜம்புநதியிற் பிறத்தலால், சாம்பூநதம் எனப் பெயர் பெற்றது. பொன் என்னும் சொல் தொல்காப்பியத்திலே புள்ளி மயங்கியலிலே "பொன்னென் கிளவி யீறுகெட முறையின்—முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ்—செய்யுள் மருங்கின் றொடரிய லான." என்னும் சூத்திரவிதிப்படி பொலம் என வந்தது. இதனைப் பிற்காலத்தார் பொன்னின் பரியாயநாமங்களுள் ஒன்றெனக் கொண்டு நிகண்டிற் சேர்த்தனர்.

சேண் இகந்து விளங்கும் செயிர் தீர் மேனி - தூர பூமியைக் கடந்து விளங்காநின்ற குற்றந் தீர்ந்த நிறத்தையும் உடைய,

சூர் அரமகளிர் பலருடன் - (கண்டார்க்கு) அச்சத்தை வருவிக்கும் தெய்வப்பெண்கள் பலருங்கூடி,

துணையோர் ஆய்ந்த இணை ஈர் ஓதி - ஆயத்தார் வகிர்ந்து கடையொத்த நெய்ப்பினையுடைய மயிரிலே,

செங்கால் வெட்சிச் சீறிதழிடைப் பைந்தாட் குவளைத் தூ இதழ் கிள்ளி இடுபு - சிவந்த காலையுடைய வெட்சியின் சிறிய பூக்களினை (விடு பூவாகத் தூவி அத) நடுவே ப

மையாகிய கண்டினையுடைய குவளையினது பரிசுத்தமாகிய இதழ்களைக் கிள்ளி இட்டு,

தெய்வ உத்தியொடு வலம்புரி வயின் வைத்து - ஸ்ரீதேவி யென்னும் தலைக்கோலத்துடனே வலம்புரி வடிவாகச் செய்யப்பட்ட தலைக்கோலத்தையும் வைத்தற்கு உரிய இடத்திலே வைத்து,

திலகம் தைஇய தேம் கமழ் திருநுதல் மகரப் பகுவாய் தாழ மண்ணுறுத்து - திலகம் இட்ட மணநாறாநின்ற அழகிய நெற்றியிலே சுறவினது அங்காந்த வாய்போலச் செய்யப்பட்ட தலைக்கோலம் தங்க அலங்கரித்து,

துவர முடித்த துகள் அறு முச்சிப் பெருந் தண் சண்பகம் செரீஇ - (வேண்டுவன கூட்டி) முற்ற முடித்த குற்றமற்ற கொண்டையிலே பெருமையாகிய குளிர்ச்சியையுடைய சண்பகப்பூவைச் செருகி,

கருந் தகட்டு உள் ஐப் பூ மருதின் ஒள் இணர் அட்டி - புறத்திலே கரிய இதழையும் அகத்திலே துய்ய இதழையும் உடைய மருதினது ஒள்ளிய பூங்கொத்துக்களை அதன்மேல் இட்டு,

கிளைக் கவின்று எழுதரு கீழ் நீர்ச் செவ்வரும்பு இணைப்புறு பிணையல் வளைஇ - பச்சென்ற அரும்புகளினின்றும் மேலே போந்து அழகு பெற்றுத் தோன்றுகின்ற நீரின் கீழே நின்ற சிவந்த அரும்பைக் கட்டிய மாலையை அந்தக் கொண்டையிலே வளையச் சுற்றி,

**வண்காது துணைத்தக நிறைந்த பிண்டி ஒண் தளிர் நுண் பூண் ஆகம் திளைப்ப - வளவிய காதிலே தம்மில் ஒக்கும்படி**

பொருந்த இட்டு நிறைந்த அசோகினது ஒள்ளிய தளிர் நுண்ணிய ஆபரணத்தையுடைய மார்பிலே அசைய,

திண் காழ் நறுங் குறடு உரிஞ்சிய பூங் கேழ்த் தேய்வை தேம் கமழ் மருது இணர் கடுப்பக் கோங்கின் குவிமுகிழ் இளமுலைக் கொட்டி - திண்ணிய வைரத்தையுடைய வாசனை பொருந்திய சந்தனக்கட்டையைத் தேய்த்த பொலிவாகிய நிறத்தையுடைய குழம்பை மணநாறுகின்ற மருதம்பூவை அப்பினாற்போலக் கோங்கினது குவிந்த அரும்பைப்போலும் இளமையாகிய முலையிலே அப்பி,

பருசாப்பு திரத்திறவலர.

வேங்கை விரி மலர் நுண் தாது அப்பி - (அவ்விரமபுல வதன் முன்னே) வேங்கையினது விரிந்த பூவினது நுண்ணிய தாதை அதன்மேல் அப்பி,

வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு காண் வரத் தெறியா - விளவினது சிறிய தளிரைக் கிள்ளி அழகு வர ஒருவர்மேல் ஒருவர் தெறித்து,

வென்று அடுவிறற் கோழி ஓங்கிய கொடி பெரிது வாழிய என்று ஏத்தி - (தப்பாமற் பட்ட பொழுது) வஞ்சியாமல் எதிர் நின்று அடுகின்ற வெற்றியையுடைய கோழி மேலாய் நின்ற கொடியானது நெடுங்காலம் வாழக்கடவது என்று வாழ்த்தி,

சீர் திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடி ஆடும் சோலை - சிறப்பு விளங்கும் மலையிடமெல்லாம் எதிரொலி செய்யும்படி பாடி யாடுஞ் சோலையினையுடைய,

மந்தியும் அறியா மரன் பயில் அடுக்கத்து - (மரமேறுந் தொழிற் சிறப்பினையுடைய) மந்திகளும் (மரச்செறிவினாலே) ஏறியறியாத மரங்கள் நெருங்கிய பக்க மலையிடத்து நின்ற,

மந்தியுமறியா என்பதற்கு ஆதித்தனும் அறியாத எனப் பொருள் கூறினும் பொருந்தும்.

காந்தட் சுரும்பு மூசாச் சுடர்ப் பூம் பெருந் தண் கண்ணி மிலைந்த சென்னியன - செங்காந்தளினது (தாம் இருப்புதலால்) வண்டுகளும் மொய்யாத நெருப்புப்போலும் பூவினாலே தொடுக்கப்பட்ட பெருமையாகிய குளிர்ச்சியையுடைய மாலையைச் சூடிய திருமுடியினையுடையவரும்,

"அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையினு— மியன்று பொருண் முடியத் தந்தன ருணர்த்தன்—மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின" என்னும மாட்டிலக்கணத்தால் மாட்டு முடித்ததாம. இவ்வாறே மேலும வருமெனஅறிக. மலையின்கண்ணே தெய்வப்பெண்கள் பலருங்கூடி, கிள்ளியிட்டு, வைத்து, அலங்கரித்து, செருகி, இட்டு, சூடி, அசைய, அப்பி, அப்பி, தெரித்து, வாழ்த்தி, பாடி, ஆடும் சோலையையுடைய பக்க மலையிடத்து, நின்ற செங்காந்தளினது பூவினாலே தொடுக்கப்பட்ட மாலையைச்சூடிய திருமுடியினையுடையவா என முடிக்க.

## பார்முதிர் என்பது தொடுத்துச் சேஎய் என்னும் வரையும் ஒருதொடர்.

பார்முதிர் பனிக்கடல் கலங்க உள் புக்கு - பாறை நிலம் முற்றுப்பெற்ற குளிர்மையாகிய கடலானது தன்னிலை குலையும்படி உள்ளே புகுந்து,

உலறிய கதுப்பின் - காய்ந்த மயிரினையும்,

பிறழ் பல் - நிரையொவ்வாத பல்லினையும்,

பேழ் வாய் - பெரிய வாயினையும்,

சுழல் விழி - கோபத்தாற் சுழலும் விழியினையும்,

பசுங் கண் - பசிய கண்ணினையும்,

நோக்கு நோக்கின் - அச்சத்தைத் தருவதாகிய பார்வையினையும்,

' கழல் கண் கூகையொடு கடும் பாம்பு தூங்கப் பெருமுலை அலைக்கும் காதின் - பிதுங்கிய கண்ணையுடைய கூகையுடனே கடிய பாம்பு தூங்குதலினாலே பெரிய தனங்களை வருத்துகின்ற காதினையும்,

பிணர் மோட்டு - சருச்சரையையுடைய வயிற்றினையும்,

உரு கெழு செலவின் - கோபம் பொருந்திய நடையினையும் உடைய,

அஞ்சு வரு பேய் மகள் - (கண்டவர்களுக்கு) அச்சந் தோன்றும் பேயாகிய மகள்,

குருதி ஆடிய கூர் உகிர்க் கொடு விரற் கண் தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை ஒண்டொடித் தடக்கையின் ஏந்தி - இரத்தத்தை அளைந்த கூரிய நகத்தையுடைய கொடிய விரலினாலே கண்ணைத் தோண்டி உண்ணப்பட்ட மிகுந்த முடைநாற்றத்தையுடைய கரிய தலையை ஒள்ளிய வளையையுடைய பெரியகையிலே எடுத்து,

வெருவர என்று அடு விறற் களம் பாடி - (அசுரர்களுக்கு) அச்சந் தோன்றும்படி வஞ்சியாமல் எதிர் நின்று கொல்கின்ற வெற்றிக்களத்தைப் பாடி,

தோள் பெயரா - தோளை அசைத்து,

நிணம் தின் வாயள் - நிணத்தைத் தின்ற வாயினையுடை யளாய்,

வாயள் என்னும் குறிப்புவினைமுற்றுச்சொல் வினையெச் சப்பொருள் தந்து நின்றது.

துணங்கை தூங்க - துணங்கைக் கூத்தாட,

துணங்கைக்கூத்தின்லக்கணம் "பழுப்புடை யிருகை முடக்கி, யடிக்கத்—துடக்கிய நடையது துணங்கை யாகும்." என் பதனாலறிக.

இரு பேர் உருவின் ஒருபேர் யாக்கை அறு வேறுவகையின் அஞ்சுவர மண்டி - (சூரன் பதுமன் என்னும்) இரண்டு பெயர்களையுடைய வடிவமாகிய ஒருபெரிய சரீரம் அற்று வேறும்படி அச்சந்தோன்ற நெருங்கி,

சூரன் பதுமன் என்னும் இருவரே சுப்பிரமண்ணியசுவாமியுடைய சாபத்தினால் ஒரு சரீரங் கொண்டு பிறந்தனர் ஆதலால் இருபே ருருவி னொருபே ரியாக்கை என்றார். அது பறறியே அச்சரீரம் வேலினால் இரு கூறாகப் பிளக்கப்பட்ட பின்னர் அவ்விருகூறும் சேவலும் மயிலுமென இரு வடிவாய் வந்தன வென்றறிக. சுப்பிரமண்ணியசுவாமி சூரன்பிறந்த பின்னரே அவனைக் கொல்லுதற்பொருட்டுச் சீகண்ட பரமசிவனது நெற்றிக்கண்ணிற் றோன்றினரென்று கந்தபுராணத்திற் கூறியிருக்க, சூரனது பிறப்புக்குச் சுப்பிரமண்ணியசுவாமியுடைய சாபத்தைக் காரணமென்றதென்னையெனின், அங்கே கூறியது அவாந்தரசிருட்டியிற் றோற்றத்தை;சுப்பிரமண்ணியசுவாமி பிரதமமகாசிருட்டியிலே மகேசுரருடைய இருதயத்தினின்றும் தோன்றினவர் என்றறிக. அது வாதுளாகமத்திலே கூறப்பட்டிருக்

கின்றது; அதனால் விரோதமின்மைதெளிக. அறு என்னும் முதனிலைத தனிவினை அற்று எனப் பொருள்பட்டு, வினையெச்சமாய நின்றது.

சூர் முதல் தடிந்த சுடர் இலை நெடு வேல் - சூரனாகிய தலைவனைக் கொன்ற ஒளிர்கின்ற இலைத்தொழிலையுடைய நெடிய வேலாகிய,

அவுணர் நல் வலம் அடங்கக் கவிழ் இணர் மாமுதல் தடிந்த - அசுரர்களுடைய நல்ல வெற்றி குன்றும்படி கீழ் நோக்கிய பூங்கொத்துக்களையுடைய மாவாகியமுதலை வெட்டிய,

இங்கே மாவென்றது அசுரர்களெல்லாரும் தம்முடனே சேர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி பெற்று கொண்டிருந்து சாதித்த மாமரத்தை.

மறு இல் கொற்றத்து எய்யா நல் இசைச் செவ்வேற் சேஎய் - குற்றமில்லாத வெற்றியினாலாகிய ஒருவராலும் அளந்தறியப்படாத நன்மையாகிய கீர்த்தியையுடைய சிவந்த ஆயுதத்தையுடைய என்றுமிளையோருமாகிய சுப்பிரமண்ணியசுவாமியுடைய,

வேலாகிய ஆயுதம் எனக்கூட்டுக. வேலாயுதம் முருகக்கடவுளுக்கு ஞானசத்தியென்க. நாயகரும் மார்பினையுடையவரும் திருமுடியினையுடையவரும் என்றுமிளையோருமாகிய சுபபிரமண்ணியசுவாமியுடைய எனமுடிக்க.

## சேவடி என்பது தொடுத்து வினையே என்னும் வரையும் ஒருதொடர்.

**சேவடி படரும் செம்மல் உள்ளமொடு நலம் புரி கொள்கைப் புலம் புரிந்து உறையும் செலவு நீ நயந்தனையாயின் -**

சிவந்த திருவடிகளைச் சிந்திக்கும் தலைமை பெற்ற உள்ளத் துடனே புண்ணியங்களை விடாது செய்யுங் கோட்பாட்டி னாலே விளையாநின்ற மெய்ஞ்ஞானத்தைச் சாதித்து (அத் திருவடிக்கீழ்) இருக்கும் நெறியை நீ விரும்பினையானால்,

திருவடிக்கீழிருத்தலே வீடுபெறுதலால் சேவடியுறையும் என்றார். அது "இறுமாந் திருப்பன் கொலோ வீசன் பல்கணத் தெண்ணப் பட்டுச்—சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென் றங்—கிறுமாந் திருப்பன் கொலோ." எனவும் "எண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனோ வெம்பெருமான் றிருவடியே யெண்ணி னல்லாற்—கண்ணிலேன் மற்றோர் களைகணில்லேன் கழலடியே கைதொழுது காணினல்லா—லொண்ணுளே யொன பது வாயில் வைத்தா யொக்க வடைக்கும்போ துணரமாட் டேன்—புண்ணியனே யுன்னடிக்கே போதுகின்றேன் பூம்புக லூர் மேவிய புண்ணியனே." எனவும் வருந் திருநாவுக்கரசுநா யனார் தேவாரங்களால் அறிக. அவ்வீடு பேற்றிற்கு ஏது ஞான மேயாதலால் புலம்புரிந்துறையும் என்றார். அது "ஞானததால் வீடென்றே நான்மறைகள் புராண நல்லவா கமஞ்சொல்ல வல் லவா மென்னு—மூனத்தா ரென்கடவ ரஞ்ஞானத்தா லுறுவது தான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தா—னுனத்தா லதுபோவ தலர்கதிர் முன்னிருள்போ லஞ்ஞான மறப்பந்த மறுமுத்தி யாகு—மீனத்தார் ஞானங்க ளல்லா ஞான மிறைவனடி ஞான மே ஞானமென்பர்." என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத் தால் அறிக. இருக்கிலே பிராமணத்திலும் உருத்திரசூக்தத்தி லும், யசுசிலே ஆருணத்திலும் பிரகதாரண்ணியகத்திலும், சாம ததிலே சாந்தோக்கியததில் ஆறுவதிலும், ஞானத்தால் முத்தி யென்றும், அதர்வசிரசிலே ஈசுர சாக்ஷாத்காரத்தினாலே முத்தி யென்றும் சொல்லுகையால், நான்மறைகள் என்றார். சைவபு ராணத்திலும் சூதசங்கிதையிலும் ஞானத்தால் முத்தியென்று சொல்லுகையால், புராணம் என்றார். சிவாகமம் ஞானத்தால்

முத்தியென்று சொல்லுமென்பது பிரசித்தம். சிவத்தொழில்களெல்லாம் சிவஞானம் வாயிலாக வீடுபேற்றிற்குக் காரணமாவதல்லது நேரே காரணமாகா ஆதலால், சேவடிபடருஞ் செம்மவுள்ளமொடு நலம்புரிகொள்கைப் புலம் என்றார். அது "கிரியையென மருவுமவை யாவு ஞானங் கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கு முண்மைச்—சரியைகிரி யாயோகத் தனைமையோர்க்குச் சாலோக சாமீப சாரூபங்கள்—மருவியிடு முயாஞான மிரண்டா மாறு மலமகல வகலாத மன்னு போதத—திருவருளோன் றென்றதனைத் தெளிய வோதுஞ் சிவாகமமென் றுலகறியச் செப்பு நாலே." என்னும் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தால் அறிக.

நீ முன்னிய வினையே பல உடல் நன்னர் நெஞ்சத்து இன்னசை இன்னே வாய்ப்பப் பெறுதி - நீ (முற்பிறப்பிலே) நினைந்து செய்த புண்ணியங்களினாலே (அநித்தியமாகிய இம்மை மறுமை யின்பங்கள்) பலவற்றையும் உவர்க்கின்ற நன்மையாகிய மனசிலே (கிளர்ந்த) இனிமையாகிய (இந்த மோக்ஷ) இச்சையினாலே (சிவஞானம்) இப்போதே வாய்க்க (அது காரணமாக முத்தியைப்) பெறுவாய்,

(நீ பரமசற்குருநாதராகிய) அக்கடவுளை அடைந்து வழிபட்டே அதனைப்பெற வேண்டுகையால், அவர் விசேஷமாக எழுந்தருளியிருக்கும் புண்ணியஸ்தலங்களைச் சொல்வேன், கேள்.

### செருப் புகன்று என்பது தொடுத்து உரியன் என்னும் வரையும் ஒருதொடர்.

செருப் புகன்று எடுத்த சேண் உயர் நெடுங்கொடி வரிப்புனை பந்தொடு பாவை தூங்க - போரைக் கூறிக் கட்டிய

அதிதூரமாக உயர்ந்த நெடிய கொடிக்கருகே (நூலினலே) வரிந்து புனையப்பட்ட பந்தினேடு பாவையானது (அறுப்பாரிலலாமையினலே) தூங்கும்படி,

வரி என்னும் முதனிலைத்தனிவினை வரிந்து எனப்பொருள் பட்டு, வினையெச்சமாய் நின்றது. பகைவாகளைப் பெண்களாக்கி அவர்கள் கொண்டு விளையாடுதற்குத தூக்கப்பட்டன என்றறிக.

பொருநர்த் தேய்த்த போர் அரு வாயில் - போர்செய்வாரை இல்லையாக்குகையினுல் (எக்காலமும்) போர்த்தொழில் அரிதாகிய வாயிலையும்,

திரு வீற்றிருந்த தீது நீர் நியமத்து - இலக்குமி வீற்றிருந்த குற்றந்தீர்ந்த அங்காடித்தெருவையும்,

மாடம் மலி மறுகின் - மாடங்கள் மலிந்த (மற்றைத்) நக்களையும் உடைய,

கூடற் குடவயின் - மதுரைக்கு மேற்குத்திக்கிலுள்ள,

அஞ்சிறை வண்டின் அரிக் கணம் - அழகிய சிறகையுடைய வண்டினது அழகிய திரள்,

இருஞ்சேற்று அகல் வயல் விரிந்து வாய் அவிழ்ந்த முள் தாள் தாமரைத் துஞ்சி - மிகுந்த சேற்றையுடைய அகன்ற வயலிலே முறுக்கு நெகிழ்ந்து (பின்பு தாதும் அல்லியுந்) தோன்ற மலர்ந்த முள்ளினையுடைய தாளையுடைத்தாகிய தாமரைப்பூவிலே இராப்பொழுது நித்திரைசெய்து,

வைகறைக் கள் கமழ் நெய்தல் ஊதி - விடியற்காலத்திலே தேன் கமழ்கின்ற நெய்தற்பூவை ஊதி,

எல் படக் கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர் ஒலிக்கும் - சூரியன் உதிக்கும்போது கண்ணைப்போல விரிந்த விருப்பம் பொருந்திய சுனைப்பூக்களிலே சென்று ஆரவாரிக்கும்,

குன்று அமர்ந்து உறைதலும் உரியன் - திருப்பரங்குன்றின்கண்ணே திருவுளமகிழ்ந்து எழுந்தருளியிருத்தலும் உரியர்.

மேற்குத் திக்கிலுள்ள திருப்பரங்குன்று எனமுடிக்க. உம்மை எதிரதுதழீஇயவெச்சவும்மை.

அதா அன்று - அதுவன்றி.

அன்றி என்னும் வினையெச்சம் தொல்காப்பியத்தில் உயிர்மயங்கியலிலே "இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி - யின்ற விகர முகர மாத—லென்றியன் மருங்கிற் செய்யுளு ளுரித்தே." என்னும் ௩௫-ம் சூத்திரத்து மொழிந்தபொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தலென்னு முத்தியான் அன்று எனத்திரிந்து நின்றது. அது என்னுஞ் சுட்டுப்பெயர்முன் வரும் அன்று மேற்படி இயலிலே "அன்றுவரு காலை யாவா குதலு—மைவரு காலை மெய்வரைந்து கெடுத லுஞ்—செய்யுண் மருங்கி னுரித்தென மொழிப." என்னும் ௫௬-ம் சூத்திரவிதிப்படி ஆன்று என முதனீண்டு நின்றது.

---

இரண்டாவது

# திருச்சீரலைவாய்.



வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை யோடையொடு துயல்வரப்
படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்
டைவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
யகலா மீனி னவிர்வன விமைப்பத்
தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார்
மனனேர் பெழுதரு வாணிற முகனே
மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுக
மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொருமுக
மந்திர விதியின் மரபுளி வழாஅ
வந்தணர் வேள்வியோர்க் கும்மே யொருமுக
மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே யொருமுகங்

'குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே யாங்கம்
மூவிரு முகனு முறைநவின் றொழுகலி
னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடு
வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்
விண்செலன் மரபி னையர்க் கேந்திய தொருகை
யுக்கஞ் சேர்த்திய தொருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை யசைஇய தொருகை
யங்குசங் கடாவ வொருகை யிருகை
யையிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப வொருகை
மார்பொடு விளங்க வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை
பாடின் படுமணி யிரட்ட வொருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய வொருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட வாங்கப்
பன்னிரு கையும் பாற்பட வியற்றி
யந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல
வுரந்தலைக் கொண்ட வுருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
யுலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ
ரலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே
யதா அன்று.

## இதன்பொருள்.

### வைந்நுதி என்பது தொடுத்துப் பண்பே என்னும் வரையும் ஒருதொடர்.

வை நுதி பொருத வடு ஆழ் வரி நுதல் வாடா மாலை ஓடையொடு துயல்வர - கூர்மையாகிய நுதியை உடைய தோட்டி வெட்டிய வடு அழுந்தின புகரை உடைய மத்தகத்திலே பொன்னரி மாலையானது பட்டத்துடனே கிடந்து அசையும்படி,

வைந்நுதி பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

படும் மணி இரட்டும் மருங்கின் - தாழ்கின்றமணி மாறி யொலிக்கும் பக்கத்தையும்,

கடு நடை - கடிய நடையினையும்,

கூற்றத்து அன்ன மாற்றரும் மொய்ம்பின் - இயமனை போன்ற (பிறராலே) தடுத்தற்கரிய வலியினையும் உடைய,

கால் கிளர்ந்து அன்ன வேழமேல் கொண்டு - (ஓடுங்கால்) காற்று எழுந்தாற் போன்ற யானையின்மேல் ஏறி,

உடைய யானை என்க. யானையின்மேல் அசையும்படி ஏற என முடிக்க.

ஐவேறு உருவின் செய்வினை முற்றிய முடியொடு விளங்கிய முரண் மிகு திரு மணி - ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடைய செய்யுந்தொழில்களனைத்தும் முற்றுப்பெற்ற முடியுடனே கூடி விளங்கிய (ஒன்றற்கொன்று) மாறுபடும் மிகுந்த அழகினையுடைய இரத்தினங்கள்,

முடிக்குரிய ஐவேறுருவு "தாம மகுடம் பதுமங் கிம்புரி—கோடா மிவை முடிக் கைவே றுருவே." என்பதனுல் அறிக.

மின் உறழ் இமைப்பில் சென்னிப் பொற்ப - மின்போலும் பிரகாசத்துடனே சிரசிலே பொலிவுபெறவும்,

நகை தாழ்பு துயல்வரூஉம் வகை அமை பொலங் குழை-ஒளி தங்கி அசையும் தொழிற்கூறு அமைந்த பொன்னினுற் செய்யப்பட்ட மகரக் குழைகள்,

சேண் விளங்கு இயற்கை வாள் மதி கவைஇ அகலா மீனின் அவிர்வன இமைப்ப - தூர பூமியிற் சென்று பிரகாசிக்கும் இயல்பையுடைய ஒளி பொருந்திய சந்திரனைச் சூழ்ந்து நீங்காத நக்ஷத்திரங்கள்போல விளங்குவனவாய் ஒளியைக் காலவும்,

தாவு இல் கொள்கைத் தந்தொழில் முடிமார் மனன்நேர்பு எழுதரு வாள் நிறமுகன் - வருத்தம் இல்லாத விரதங்களையுடைய தங்கள் தவத்தொழிலை முடிக்கும் பெரியோர்களுடைய மனசிலே பொருந்தித் தோன்றும் ஒளி பொருந்திய நிறத்தையுடைய முகங்களுள்,

பொலிவு பெறவும் ஒளியைக் காலவும் தோன்றும் முகங்களுள் எனமுடிக்க.

ஒருமுகம் மாயிருள் ஞாலம் மறு இன்றி விளங்கப்பல் கதிர் விரிந்தன்று - ஒருமுகமானது பெருமையாகிய இருளையுடைய உலகம் குற்றமில்லாமல் விளங்கும்பொருட்டுப் பல கிரணங்களையும் தோற்றுவித்தது,

ஒருமுகம் ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகிக் காதலின் உவந்து வரம் கொடுத்தன்று - ஒரு முகமானது அன்

பர்கள் துதித்தால் (அவர்கள் குற்றங்களை நீக்குதற்கு)உடன் பட்டு அவர்களுக்கு இனிதாய் நடந்து (அவர்கண்மேற் சென்ற) விருப்பத்தினாலே மகிழ்ந்து அவர்கள் வேண்டும் வரங்களைக் கொடுத்தது,

ஒருமுகம் மந்திர விதியின் மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி ஓர்க்கும் - ஒருமுகமானது மந்திரத்தையுடைய வேதத்திற்சொல்லிய முறைமை தவறாத பிராமணர்களு டைய யாகங்களிலே தீங்கு வாராதபடி நினையாநிற்கும்,

ஒருமுகம் எஞ்சிய பொருள்களை ஏம் உற நாடித் திங்கள் போலத் திசை விளக்கும் - ஒரு முகமானது (வேதாகமங் களிலே) மறைந்து கிடக்கும் பொருள்களை (இருடிகள்) இன் பம் பொருந்தும்படி ஆராய்ந்து போதித்துச் சந்திரனைப் போலத் திசைகளெல்லாவற்றையும் விளக்கும்,

* ஏமம் என்பது ஏம் எனக் கடைக்குறைந்து நின்றது. கலை நிறைதலால், திங்கள் உவமையாயிற்று.

ஒருமுகம் செல் சமம் முருக்கிக் கறுவு கொள் நெஞ் சமொடு செறுநர்த் தேய்த்துக் களம் வேட்டன்று - ஒரு முகமானது (திருவுள்ளத்திலே) நிகழாநின்ற சமத்துவ த்தை ஒழித்துக் கோபங்கொண்ட திருவுள்ளத்துடனே பகைவராகிய அசுரர்களை வதைத்துப் போர்க்களவேள்வியை வேட்டது,

சமத்துவத்தை ஒழித்தலாவது தேவரையும் அசுரரையும் ஒப்பக் கருதாமல் தேவரைக்காத்து அசுரரை அழித்தலாம். அது குற்றமாகாமை "தந்தை தாய் பெற்ற தத்தம் புதல்வர்கடஞ் சொலாற்றின்—வந்திடா விடிலுறுக்கி வளாரினா லடித்துத் தீய—பந்தமுமிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகு—மிந்த

"நீர் முறைமை யன்றோ வீசனார் முனிவுமென்றும்" எனவும் "போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்—யோகியா யோக முத்தி யுதவுத லதுவுமோரார்—வேகியா னாற் போற்செயத வினையினை வீட்ட லோரா—ரூகியா மூடரெல்லா மும்பரி னொருவ னென்பர்" எனவும் வரும் சிவஞானசித்தித் திருவிருத்தங்களால் அறிக.

ஒருமுகம் குறவர் மடமகள் கொடி போல் நுசுப்பின் மட வ்ரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்று - ஒருமுகமானது வேடருடைய மடப்பத்தையுடைய மகளும் கொடிபோலும் இடையினையுடைய இளம்பெண்ணுமாகிய வள்ளிநாயகி யுடனே மகிழ்ச்சியைப் பொருந்திற்று,

வள்ளிநாயகி முருகக்கடவுளுக்கு இச்சாசத்தி யென்க. காமநுகர்ச்சி யில்லாத கடவுள் இங்ஙனம் நகையமர்ந்தது உல கத்திலே இல்வாழ்க்கை நிகழ்தற்பொருட்டென்க. அது "தென் பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்—பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ—பெண்பா லுகந்திலனேற் பேதா யிரு நிலத்தோர்—விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ" என்னும் திருவாசகத்தாலும் "போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரித லோரார்—யோகியா யோகமுத்தி யுதவுத லதுவுமோரார்" என்பதனாலு மறிக.

அம மூவிரு முகனும் ஆஙகு முறை நவின்று ஒழுக லின் - அவ்வாறுமுகங்களும் அத்தொழில்களிடத்துச் செய் யுமுறைமைகளைப் பயின்று நடத்துகையினாலே (அம் முகங் களுக்கு ஏற்ப,)

ஆரம் தாழ்ந்த அம் பகட்டு மார்பில் செம் பொறி வாங்கிய - பதக்கந் தூங்கிய அழகிய பெரிய மார்பிலே கிடக்

கின்ற (உத்தம இலக்கணமாகிய) சிவந்த மூன்று வரிகளை யும் (தன்னிடத்திலே வந்து விழும்படி) வாங்கிக்கொண்ட,

அவ்வரிகள் தோளளவும் வந்து கிடக்கின்றமையால் வாங் கிய என்றார். ''வரையகன் மார்பிடை வரியமூன் றுள'' என் றார் பிறரும். வாங்கிய என்னும் பெயரெச்சம தோள் என்னும் பெயர் கொண்டது.

மொய்ம்பில் வண்புகழ் நிறைந்து சுடர் விடுபு வசிந்து வாங்கு நிமிர் தோள் - தமது வலிமையினாலே பெரிய புகழ் நிறையப்பெற்றுப் படைக்கலங்களைச் செலுத்திப் (பகைவ ரது) மார்பைப் பிளந்து அவைகளை வாங்குகின்ற நிமிர்ந்த தோள்களுள்,

சுடர் அதனையுடைய படைக்கலத்துக்கு ஆயினமையால் ஆகுபெயர். வசிதல் பிளத்தல். அசுரர் முதலியோரைக் கொல் லும்போது, பன்னிருகையிலும் படைக்கலந் தரிப்பாராதலால், இவ்வாறு கூறினார். இனி அது செய்யாக்காலத்து இப்படியிருக்கு மென்று அவைகளின் இயல்பு கூறுகின்றார்.

ஒருகை விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை உக்கஞ் சேர்த்தியது - ஒருகையானது (எக்காலத்தும்) ஆகா யத்திலே இயங்குதலாகிய முறைமையினையுடைய தேவவிரு டிகளுக்குப் பாதுகாவலாக எடுத்தது, அதற்கு இணையாகிய கை மருங்கிலே வைத்தது,

விண்செலன் மரபினையர் என்றது சூரியனுடைய வெம்மை யைப் பல வுயிர்களும் பொறுக்கலாற்றா என்று நினைந்து தமது திருவருளினாலே அதனோடு திரிந்து அவ்வெம்மையைப் பொறுக் கும் முனிவரை. அது ''நிலமிசை வாழ்ந ரலமர நீரத்—தெறு கதிர்க் கனலி வெம்மை தாங்கிக்—காலுணவாகச் சுடரொடு

கொட்கு—மலிர்சடை முனிவரு மருள" என்னும் புறப்பாட்டால் அறிக. அவர்களைப் பாதுகாக்கவே உலகத்தைத் தாங்கிக் காத்ததாயிற்று. மனமும் முகமும் கையும் ஒருதொழிலைச்செய்த தால், மற்றக்கை தொழிலின்றி மருங்கிலே கிடந்தது. இதனாலே இந்தக் கை மாயிருண்ஞால மறுவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்தமுகத்திற்கு ஏற்றதொழில் செய்ததாயிற்று.

ஒருகை அங்குசம் கடாவ ஒருகை நலம் பெறு கலிங் கத்துக் குறங்கின்மிசை அசைஇயது - ஒருகையானது தோட்டியைச் செலுத்த அதற்கு இணையாகிய கையானது நன்மை பொருந்திய ஆடையையுடைய தொடையின்மேலே கிடந்தது,

முன் வேழமேல்கொண்டு என்றமையால், அதற்கு இயைய இவ்வாறு கூறினர். தம்மை வழிபடுவோரிடத்திற் செல்லுங் கால் யானைமேற்கொண்டு சென்று அருள்செய்தல் இயல்பாக லால், இக்கைகள் காதலின்வந்து வரங்கொடுத்த முகத்துக்கு ஏற்ற தொழில் செய்தமை அறிக.

இருகை ஐயிருவட்டமொடு எஃகு வலம் திரிப்ப - இரண்டுகைகள் அழகிய பெரிய பரிசையோடு வேலாயுதத்தை வலமாகச் சுழற்ற,

அசுரர்கள் வந்து வேள்வியை அழியாமல் அவர்களை ஓட்டும்பொருட்டு இவைகளைச் சுழற்றுதலால், இக்கைகள் வேள்வி யோர்க்கும் முகத்துக்கு ஏற்றவாறறிக.

ஒருகை மார்பொடு விளங்க ஒருகை தாரொடு பொலிய - (முனிவர்களுக்கு உரையிறந்த பொருளை உணர்த்தும் போது) ஒருகையானது மார்பினுடனே விளங்க அதற்கு இணையாகிய கை மார்பிலே தாழ்ந்த மாலையோடு சேர்ந்து அழகுபெற,

மார்பினொடு விளங்குதல் மௌனமுத்திரைகாட்டி என்க. அது "இருவரு முணரா வண்ண லேனவெள் ளெயிறி யாமை—சிரநிரை யனந்த கோடி திளைத்திடு முரத்திற் சேர்கொள்—கரதல மொன்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி—யொருக ணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரினுற்றான்." என்னும் கந்தபுராணச் செய்யுளால் அறிக. கடவுள் தாமே மௌன முத்திரைகாட்டி அமர, மாணாக்கர்களுக்கு ஆனந்தமயமாகிய உள்ளொளி நிறையும் என்க. இக்கைகள் எஞ்சிய பொருளை விளக்கும் முகததிறகு ஏற்றவாறறிக.

ஒரு கை தொடியொடு மீமிசைக் கொட்பக் கீழ்வீழ் ஒரு கை பாடு இன் படு மணி இரட்ட - ஒருகையானது தொடியுடனே மேலே சுழன்று களவேள்வியை வேட்கும் முத்திரை கொடுக்கக் கீழ் விழுந்த மற்றக் கையானது ஓசை இனிதாகிய அசைகின்ற மணியை மாறி யொலிக் கப்பண்ண,

இந்தக்கைகள் களவேள்வி வேட்கும் முகத்திற்கு ஏற்ற மைகாண்க.

ஒரு கை நீல் நிற விசும்பின் மலி துளி பொழிய ஒரு கை வான் அரமகளிர்க்கு வதுவை சூட்ட - ஒருகையானது நீல நிறத்தையுடைய முகிலினாலே மிகுந்த மழையைப் பெய்விக்க அதற்கு இணையாகிய கையானது சுவர்க்கத்திலுள்ள தெய்வப்பெண்களுக்கு மணமாலையைச் சூட்ட,

வள்ளிநாயகியோடு நகையமர்ந்த முகம் உலகத்திற்கு இல் வாழ்க்கையை நிகழ்த்தவிப்பது ஆதலால், அவ்வில்வாழ்க்கை நிகழ்த்துதற்கு மழையைப் பெய்தது ஒருகை. மற்றொருகை இல்

வாழ்க்கை நிகழ்த்தற்பொருட்டு மணமாலையைச் சூட்டிற்று எனவறிக.

ஆங்கு அப்பன்னிருகையும் பாற் பட இயற்றி - அப்படியே அந்தப் பன்னிரண்டு கைகளும் முகத்தின்பகுதிப்படும்படி தொழில் செய்து,

அந்தரப் பல்லியம் கறங்க - தேவதுந்துபி ஒலிக்கவும்,

திண் காழ் வயிர் எழுந்து இசைப்ப - திண்ணிய வைரத்தையுடைய கொம்புகள் மிக்கொலிக்கவும்,

உரம் தலைக்கொண்ட உரும் இடி முரசமொடு வால்வளை நரல - வலிமையைத் தன்னிடத்திலே கொண்ட இடியினது இடிப்புப்போலும் முரசத்தோடு வெள்ளிய சங்குகள் முழங்கவும்,

பல் பொறி மஞ்ஞை வெல் கொடி அகவ - பல பீலியையுடைய மயிலானது (தமது ஆணையினாலே) வென்று எடுத்த கொடியிலே ஒலிக்கவும்,

விசும்பு ஆறாக விரை செலல் முன்னி - ஆகாயமே வழியாக விரைந்த செலவை மேற்கொண்டு,

ஓங்கு உலகம் புகழ்ந்த உயர் விழுச் சீர் அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பு - நன்மையோங்கிய மேன்மக்கள் புகழ்ந்த உயர்வாகிய சிறப்புப் பொருந்திய கீர்த்தியையுடைய திருச்செந்தூருக்கு எழுந்தருளுதலும் அவருக்கு நிலைபெற்ற குணம்.

யானையின்மேல் அசையும்படி ஏறி, தொழில்செய்து, ஒலிக்கவும் மிக்கொலிக்கவும் முழங்கவும் ஒலிக்கவும் மேற்கொண்டு,

திருச்செந்தூருக்கு எழுந்தருளுதலும் அவருக்கு நிலைபெற்ற குணம் என முடிக்க.

அதா அன்று - அதுவன்றி,

---

மூன்றாவது

## திருவாவினன்குடி.

சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானி
னுரிவை தைஇய வூன்கெடு மார்பி
னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகற்
பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு
செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சிய ரிடும்பை
யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசி றூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவி
னல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவல ரின்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவி

னவிர்தளிர் புரையு மேனிய ரவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலைய ரின்னகைப்
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குன்
மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
யெருத்த மேறிய திருக்கிளர் செல்வனு
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
வுலகங் காக்கு மொன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக
வேமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
நான்முக வொருவற் சுட்டிக் காண்வரப்
பகலிற் றோன்று மிகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரோ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு

வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீயெழுந் தன்ன திறலினர் தீப்பட
வுருமிடித் தன்ன குரலினர் விழுமிய
வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மா
ரந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னா
ளாவி னன்குடி யசைதலு முரியனதா அன்று.

இதன்பொருள்.

சீரைதைஇய என்பது தொடுத்து உரியன் என்னும் வரையும் ஒருதொடர்.

சீரை தைஇய உடுக்கையர் - மரவுரியை உடையாகச் செய்த உடையினையுடையவரும்,

சீரொடு வலம்புரி புரையும் வால் நரை முடியினர் - அழகோடு (வடிவாலும் நிறத்தாலும்) வலம்புரிச் சங்கைப்போலும் வெள்ளிய நரைமுடியினையுடையவரும்,

மாசு அற இமைக்கும் உருவினர் - (எக்காலத்தும் நீராடுதலால்) அழுக்கற விளங்கும் வடிவினையுடையவரும்,

மானின் உரிவை தைஇய ஊன் கெடு மார்பின் என்பு எழுந்து இயங்கும் யாக்கையர் - மான்றோல் போர்த்த (விரதங்களால் பட்டினியிருத்தல்பற்றித்) தசைகெடுகின்ற மார்பில் எலும்புகள் கோவை தோன்றி விளங்கும் உடம்பினையுடையவரும்,

போர்த்த மார்பு என்க.

நன்பகல் பல உடன் கழிந்த உண்டியர் - (எப்பொருளையும் நுகர்தற்கு) நன்றாகிய பகற்பொழுதுகள் பலவுஞ்சேரக் கழிந்த உணவினையுடையவரும்,

இகலொடு செற்றம் நீக்கிய மனத்தினர் - மாறுபாடுடனே செற்றத்தையும் போக்கிய மனதினையுடையவரும்,

செற்றமாவது நெடுங்காலம் நிகழும் பகைமை.

கற்றோர் யாவதும் அறியா அறிவினர் - பலவற்றையுங் கற்றவர் சிறிதும் அறியாத அறிவினையுடையவரும்,

கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர் - பலவற்றையுங் கற்றவருக்குத் தாம் எல்லையாகிய தலைமையையுடையவரும்,

கல்விக் கரைகண்டவர் என்பது கருத்து.

காமமொடு கடுஞ்சினம் கடிந்த காட்சியர் - ஆசையுடனே கடிய சினத்தையும் போக்கிய அறிவினையுடையவரும்,

சினமாவது கோபத்தின்பின் சிறுபொழுது நிற்பது.

இடும்பை யாவதும் அறியா இயல்பினர் - (தவத்தினாலே சரீரம் வருந்தினும்) மனவருத்தம் சிறிதும் அறியாத இயல்பினையுடையவருமாகிய,

துனி இல் காட்சி முனிவர் மே வர முற்புக - (ஒருவரோடும்) வெறுப்பில்லாத நல்லறிவினையுடைய முனிவர்கள் (திருவுளம்) பொருந்துதல் வரும்படி முன்னேசெல்லவும்,

புகை முகந்து அன்ன மாசு இல் தூ உடை - புகையை முகந்தாற்போன்ற (தெய்வத்தன்மையால்) அழுக்கேறாத பரிசுத்தமாகிய உடையினையும்,

முகை வாய் அவிழ்ந்த தகை சூழ் ஆகத்து - முகைவாய் நெகிழ்ந்த மாலை சூழ்ந்த மார்பினையுமுடைய,

மெல் மொழி மேவலர் - (எக்காலத்தும்) மெல்லிய வார்த்தை சொல்லுதலைப் பொருந்திய கந்தருவர்கள்,

நோய் இன்று இயன்ற யாக்கையர் - (மனிதருக்கு உரிய) நோய் இல்லையாகும்படி நிருமித்த உடம்பினையுடையவரும்,

மாவின் அவிர் தளிர் புரையும் மேனியர் - மாவினது விளங்குகின்ற தளிரைப்போலும் நிறத்தினை யுடையவரும்,

அவிர்தொறும் பொன்னுரை கடுக்கும் திதலையர்-விளங்குந்தோறும் பொன்னுரை விளங்கினாற்போலும் தேமலையுடைய வருமாகிய,

இன்னகைப் பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல் - இனிமையாகிய ஒளியையுடைய பருமத்தையணிந்த (தாழவேண்டும் இடம்) தாழ்ந்து (உயரவேண்டும் இடம்) உயர்ந்த அல்குலையுடைய,

பருமம் பதினான்கு கோவைமணி.

மாசு இல் மகளிரொடு - குற்றம் இல்லாத கந்தருவப் பெண்களுடனே,

செவி நேர்பு வைத்த செய்வு உறு திவவின் நல் யாழ் நவின்ற நயன் உடை நெஞ்சின் - எங்கு செவியினாலே (சுருதியை) அளந்து நரம்பைக் கட்டின சுற்றுதலுறும் வார்க்கட்டினையுடைய நன்மையாகிய யாழின் இசையிலே பயின்ற இனிமை பொருந்திய மனசினாலே,

மறு இனறு விளங்க இன் நரம்பு உளர - (இசை நூலின் விதித்த முறைமை) குற்றமின்றி விளங்கும்படி இனிய நரம்பை வாசிக்கவும்,

கடுவோடு ஒடுங்கிய தூம்பு உடை வால் எயிற்று - நஞ்சுடனே (உறைக்குள்ளே) கிடந்த துளையினையுடைய வெள்ளிய பற்களையும்,

" மிடற்றில் நஞ்சு தம்மிடத்தே தோன்றுதலால் கடுவோடு என்றார். பற்கள் காளி, காளாதத்திரி, யமன், யமதூதி என நான்காம்.

அழலென உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல் - நெருப்பென்று சொல்லும்படி நெட்டுயிர்ப்புக் கொள்ளுநம் (கண்டவர்களுக்கு) அச்சந்தோன்றும் கடிய வலிமையினையுமுடைய,

பாம்பு படப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ் சிறைப்புள் அணி நீள் கொடி - பாம்பு சாகும்படி அடிக்கும் பலவரிகளையுடைய வளைந்த சிறகினையுடைய கருடனை அணிந்த நீண்ட கொடியினையும்,

நாற் பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய உலகம் காக்கும் ஒன்று புரி கொள்கைச் செல்வனும் - பெருமையாகிய (இந்திரன் யமன் வருணன் குபேரன்) என்னும் நான்கு தேவர்களுடைய நன்மையாகிய நகரங்களினாலே நிலைபெற்ற உலகத்தைக் காக்கும் ஒரு தொழிலையே விரும்பிய கோட்பாட்டையுமுடைய விஷ்ணுமூர்த்தியும்,

வலவயின் வெள் ஏறு உயரிய - வெற்றிக் களத்திலே வெள்ளிய இடபக்கொடியை எடுத்த,

உமை அமர்ந்து விளங்கும் - உமாதேவி ஒருபாகத்திலே பொருந்தி விளங்குகின்ற,

பலர் புகழ் திணி தோள் இமையா முக்கண் - பலரும் புகழ்கின்ற திண்ணிய தோளினையும் இதழ் குவியாத மூன்றுகண்களையுமுடைய,

மூவெயில் முருக்கிய முரண் மிகு செல்வனும் - முப்புரத்தையும் அழித்த வலிமை மிகுந்த பரமசிவனும்,

எடுத்த பரமசிவன், விளங்குகின்ற பரமசிவன், உடைய பரமசிவன் என்க.

நூற்றுப் பத்து அடுக்கிய நாட்டத்து - ஆயிரங் கண்களையும்,

நூறு பல் வேள்வி முற்றிய வென்று அடு கொற்றத்து - நூறாகிய பலயாகங்களைச் செய்து முடித்தலினாலே பெற்ற (பகைவரை) வென்று கொல்கின்ற வெற்றியினையுமுடைய,

ஏந்திய ஈரிரண்டு மருப்பின் எழில் நடைத் தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும் - (தலைகள்) ஏந்திய நான்குகோடுகளையும் அழகிய நடையையும் (நிலத்திலே) கிடக்கின்ற பெரிய வளைவினையுடைய கையையும் உடைத்தாகிய (யாவராலும்) உயர்த்துச் சொல்லப்பட்ட வெள்ளையானையின் கழுத்தில் ஏறிய அழகு விளங்குகின்ற இந்திரனும்,

பலர் புகழ் மூவரும் தலைவராக - பலரும் புகழ்கின்ற (அயன் அரி அரன் என்னும்) மூவரும் தத்தமக்கு உரிய தொழில்களை (முன்போலச் செய்து) தலைவராகவேண்டி,

முருகக்கடவுள் அசுரரைக் கொன்று தேவரைக் காத்துத் தெய்வயானையம்மையைத் திருமணஞ் செய்தபோது, தமது திருக்கையிலிருந்த வேலை நோக்கி, நமக்கு இவைகளெல்லாந் தந்தது இவ்வேல் என்று திருவாய்மலர்ந்தருள, அருகில் இருந்த பிரமதேவர் இவ்வேலுக்கு இந்நிலை என்னால் வந்தது என்றார். முருகக்கடவுள், நமகையில் வேலுக்கு நீ கொடுக்க ஒருசத்தி உண்டா என்று கோபித்து, இப்படிச் சொல்லிய நீ பூமியிற்செல்வாய் என்று சபித்தருளினார். அவ்வாறே பிரமதேவர் படைத்தற்றொழிலைத் தவிர்ந்து, பூமியிற்சென்றார். அங்ஙனமாகவே, மற்றை இருவருக்கும் காத்தற்றொழிலும் அழித்தற்றொழிலும் இலவாயின. இதுபற்றியே மூவருந்தலைவராக என்றார்.

ஞாலந் தன்னில் தோன்றி எழுமுறம் தாமரை பயந்த ஊழித் தாவு இல் நான்முக ஒருவற் சுட்டி - பூமியின் கண்ணே தோன்றிய மயக்கமுறுகின்ற (விஷ்ணுமூர்த்தியுடைய) உந்தியங்கமலம் பெற்ற ஊழிக்காலத்தில் கெடுதலில்லாத நான்கு முகங்களையுடைய பிரமதேவரை (பழைய நிலையிலே நிறுத்த) நினைந்து,

பகலில் தோன்றும் இகல் இல் காட்சி நால் வேறு இயற்கைப் பதினொரு மூவரோடு - (ஒருபொருள் பலவாமாறு) பகுக்கும்போது வேறுபடத்தோன்றும் தம்முள் மாறுபாடு இல்லாத அறிவினையுடைய நான்காகிய வேறுபாட்டியல்பினையுடைய முப்பத்து மூவரோடு,

ஆதித்தன் உருத்திரன் வசு மருத்துவன் எனப்படும் நான்கு கூற்றுப் பொருள்களுள் ஒவ்வொன்றைப் பலவாகப் பகுக்குங்கால், முறையே பன்னிரண்டு பதினொன்று எட்டு இரண்டு ஆகப் பகுக்கப்பட்டு முப்பத்துமூன்றாய் விரிதலால், இவ்வாறு கூறினார். பதினொருமூன்று பதினொன்றாகிய மூன்று என

விரியும். ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் என்றுணர்க.

ஒன்பதிற்றிரட்டி உயர்நிலை பெறீஇயர் - பதினெண்வகையாகிய உயர்ந்த நிலைபெற்ற கணங்களுள்,

பதினெண் கணங்களாவார், தேவர் சித்தர் அசுரர் தைத்தியர் கருடர் கின்னரர் நிருதர் கிம்புருடர் கந்தருவர் இயக்கர் விஞ்சையர் பூதர் பைசாசர் அந்தரர் முனிவர் உரகர் ஆகாசவாசிகள் போகபூமியர்கள் என இவர்.

மீன் பூத்து அன்ன தோன்றலர் - நக்ஷத்திரங்கள் பூத்தாற்போன்ற தோற்றத்தையுடையர்களாகியும்,

மீன் சேர்பு வளி கிளர்ந்து அன்னசெலவினர் - கடலினிடத்தே சேர்ந்து காற்று எழுந்தாற்போன்ற செலவினையுடையவர்களாகியும்,

மீன் என்பது அது உலவும் இடமாகிய கடலுக்கு ஆதலால் ஆகுபெயர்.

வளியிடைத் தீ எழுந்து அன்ன திறலினர் - காற்றிடத்தே நெருப்பு எருந்தாற்போன்ற வலியினையுடையவர்களாகியும்,

தீப் பட உரும் இடித்து அன்ன குரலினர் - நெருப்புப் பிறக்கும்படி இடி இடித்தாற்போன்ற குரலினையுடையவர்களாகியும்,

காண் வர - அழகோடு (கூடி) வரவும்,

தம் விழுமிய பெறுமுறை குறைவுறும் மருங்கிற் கொண்மார் - தங்கள் சிறந்த தொழில்களை (முன்போலப்) பெறு

முறைமையைக் குறைவேண்டி நின்றுபெறுங் கூற்றினாலே பெறும்பொருட்டு,

அந்தரக் கொட்பினர் உடன் வந்து காண - ஆகாயத்திலே திரிதலையுடையர்களாய் ஒருங்கே வந்து காணும்படியாக,

தாவு இல் கொள்கை மடந்தையொடு ஆவினன் குடி சின்னாள் அசைதலும் உரியன் - கெடுதலில்லாத கற்பினையுடைய தெய்வயானையம்மையோடு திருவாவினன்குடியின்கண்ணே சிலநாள் எழுந்தருளியிருத்தலும் உரியர்.

அயன் அரி அரன் என்னும் மூவரும் தத்தமக்கு உரிய தொழில்களைச் செய்து தலைவராக வேண்டி, பிரமதேவரைப் பழைய நிலையிலே நிறுத்த நினைந்து, விஷ்ணுமூர்த்தியும் பரமசிவனும் இந்திரனும் முனிவர்கள் முன்னே செல்லவும், கந்தருவர்கள் கந்தருவப்பெண்களோடு இனிய நரம்பை வாசிக்கவும், முப்பத்து மூவரோடு பதினெண் கணங்களும் கூடிவரவும் தங்கள்சிறந்த தொழில்களைப் பெறுமுறைமையைக்குறைவேண்டி நின்று பெறுங்கூற்றினாலே பெறும்பொருட்டு ஒருங்கு வந்து காணும்படியாகத் திருவாவினன்குடியிலே எழுந்தருளியிருத்தலும் உரியர் என முடிக்க.

அதா அன்று - அதுவன்றி,

---

நான்காவது

# திருவேரகம்.

---

இருமூன் றெய்திய வியல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி

யறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
வொன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
யுச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலு முரியன தாஅன்று.

இதன்பொருள்.

இருமூன்று என்பது தொடுத்து உரியன்
என்னும் வரையும் ஒருதொடர்.

இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது - (ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்னும்) ஆறாகிய (நன்மை) பொருந்திய இலக்கணத்தின் வழுவாமல்,

இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல் குடி - (தாயும் தந்தையும் ஆகிய) இருவர் குலத்தையும் (உலகத்தார்)நன்று என்று மதித்த பலவாய் வேறுபட்ட பழைய குடியிலே பிறந்த,

அறு நான்கு இரட்டி யாண்டு நல்லிளமை ஆறினில் கழிப்பிய - நாற்பத்தெட்டுவருடத்து நன்மையாகிய இளமையை (வேதங்கூறிய பிரமசரிய) நெறியிலே போக்கிய,

அறன் நவில் கொள்கை - தருமநூலை (எப்பொழுதும்) கூறுகின்ற கோட்பாட்டினையும்,

மூன்று வகைக் குறித்த முத்தீச்செல்வத்து - (சதுரமும் முக்கோணமும் வில்வடிவுமாகிய) மூன்றுவகையாகக் குறிக்கப்பட்ட (ஆகவநீயம் தக்ஷிணாக்கினி காருகபத்தியம் என்னும்) மூன்றக்கினியினால் உண்டாகும் செல்வத்தினையும்

ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண் இருபிறப்பாளர் - (மூன்று நூல்கொண்டு மூன்று புரியாக்குதலால்) ஒன்பதாகிய நூலைத் தன்னிடத்தே கொண்ட ஒருபுரி மூன்றாகிய நுண்ணிய உபவீதத்தையுமுடைய பிராமணர்கள்;

பிறந்த பிராமணர்கள், போக்கிய பிராமணர்கள் என்க.

பொழுது அறிந்து - (தாங்கள் வழிபடுங்) காலத்தை அறிந்து,

புலராக் காழகம் புலர உடீஇ - (ஸ்நானம் பண்ணித்) தோய்த்து உலராத புடைவையை (உடம்பிலே கிடந்து) உலரும்படி உடுத்து,

அரு மறை ஆறெழுத்து அடக்கிய கேள்வி - அருமையாகிய வேதத்திலே சொல்லப்பட்ட ஆறு அக்ஷரத்தைத் தன்னிடத்தடக்கிய மந்திரத்தை

நா இயல் மருங்கில் நவிலப் பாடி - நாக்குப் புடைபெயரும் அளவிலே பயில உச்சரித்து,

விரை உறு நறுமலர் ஏந்தி - (பின்னர்) வாசம் மிகுந்த நன்மையாகிய பூக்களை எடுத்து அருச்சித்து,

உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து நுவல - தலையிலே குவித்த கையினையுடையவர்களாய் தம்மைப் புகழ்ந்து துதிக்க;

பெரிது உவந்து ஏரகத்து உறைதலும் உரியன் - மிக மகிழ்ந்து திருவேரகத்தின்கண்ணே எழுந்தருளியிருத்தலும் உரியர்.

பிராமணர்கள் அறிந்து, உடுத்து, உச்சரித்து, எடுத்து அருச்சித்து, தம்மைப் புகழ்ந்து துதிக்க; மகிழ்ந்து திருவேரகத்தின்கண்ணே எழுந்தருளியிருத்தலும் உரியர் என முடிக்க.

அதா அன்று - அதுவன்றி,

---

ஐந்தாவது

# குன்றுதோரூடல்.

பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணியன்
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கட் டேறற்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர
விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
யிணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிணர் ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை

திருந்துகா ழல்கு றிளைப்ப வுடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
றகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடிய னெடியன் றொடியணி தோளன்
னரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையி னியல வேந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத்தலைத் தந்து
குன்றுதோ றாடலு நின்றதன் பண்பே யதாஅன்று.

இதன்பொருள்.

பைங்கொடி என்பது தொடுத்துப் பண்பே
என்னும் வரையும் ஒருதொடர்.

நறும் சாந்து அணிந்த கேழ் கிளர் மார்பின் கொடும் தொழில் வல் வில் கொலைஇய கானவர் - நறிய சந்தனத்தைப் பூசிய நிறம் விளங்கும் மார்பினையுடைய கொடிய தொழிலையுடைய வலிமையாகிய வில்லினாலே கொலை செய்த வேடர்கள்,

மார்பினையுடைய வேடர்கள் என்க.

நீடு அமை விளைந்த தேக்கள் தேறல் குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து - நீண்ட மூங்கிலிலே இருந்து முற்றின

தேனூற் செய்த கட்டெளிவை மலையிடத்துச் சிற்றூரிலிருக்கும் சுற்றத்துடனே உண்டு மகிழ்ந்து,

விரல் உளர்ப்ப அவிழ்ந்த வேறுபடு நறும் கால்-விரற்றலையினாலே வலிய மலர்ந்தமையால் வேறுபடுகின்ற மணம் பொருந்திய தாளினையுடைய

உளர்ப்ப என்பதன்கணீற்றகரம் விகாரத்தாற் றொக்கது.

குண்டு சுனை பூத்த வண்டு படு கண்ணி இணைத்த கோதை அணைத்த கூந்தல் - ஆழமாகிய சுனையிலே பூத்த வண்டு விழுகின்ற அரும்புகளினாலே தொடுக்கப்பட்ட மாலையை அணிந்த அளகத்தையும்

தாளையுடைய அரும்புகளூ என்க.

முடித்த குல்லை இலை உடை நறும் பூ செங்கால் மராஅத்த வால் இணர் இடை இடுபு சுரும்பு உணத்தொடுத்த பெரும் தண் மாத் தழை - இலையைத் தலையிலேயுடைய கஞ்சாவையும் இலையையுடைய நறிய பூக்களையும் செவ்விய காலையுடைய கடம்பினிடத்தனவாகிய வெள்ளிய பூங்கொத்துக்களை நடுவே வைத்து வண்டுகள் தேனை உண்ணும்படி தொடுத்த பெரிய குளிர்ந்த அழகிய தழையை

குல்லை என்பதற்கு இப்பொருள் "கஞ்சங் குல்லை கஞ்சாவாகும்." என்னும் திவாகரச்சூத்திரத்தால் அறிக.

காழ் திருந்து அல்குல் திளைப்ப உடீஇ - வடங்கள் திருந்தும் அல்குலிடத்தே அசையும்படி உடுத்து,

மயில் கண்டு அன்ன மடநடை மகளிரொடு - சாயலுடைமையால் மயில் காணப்பட்டாற்போன்ற மடப்பம்பொருந்திய ஒழுக்கத்தையுமுடைய பெண்களோடும்,

உடீஇ என்னும் வினையெச்சம் அன்ன என்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது. அளகத்தையும் ஒழுக்கத்தையுமுடைய பெண்கள் என்க.

தொண்டகச் சிறுபறைக் குரவை அயர - தங்கள் குறிஞ்சி நிலத்திற்குரிய தொண்டகமாகிய சிறிய பறையினது தாளத்திற்கிசையக் குரவைக் கூத்தாட,

குரவைக்கூத்து இதுவெனபது "குரவைக் கூத்தே கைகோத் தாடல்." என்னும் திவாகரச் சூத்திரத்தால் அறிக.

வேலன் பைங்கொடி அம் பொதிப் புட்டில் விரைஇ நறைக்காய் இடை இடுபு குளவியொடு வெண்கூதாளம் தொடுத்த கண்ணியன் - படிமத்தான் பச்சிலைக்கொடியினாலே அழகிய பொதிதலை உடைய தக்கோலக்காயைக்கலந்து சாதிக்காயை நடுவே இட்டு மலைப்பச்சையோடு வெண்டாளியையும் கூதாளியையுந் தொடுத்த மாலையைச் சூடி,

வடிவினாற் புட்டில் போன்ற தக்கோலக்காயைப் புட்டிலென ஆகுபெயராற் கூறினார். நறு மணமுடைமையால் சாதிக்காய் நறைக்காய் எனப்பட்டது.

செய்யன் - செந்நிறத்தை உடையராய்,

சிவந்த ஆடையன் - சிவந்த ஆடையை உடுத்து,

செவ்வரைச் செயலைத் தண்டளிர் துயல்வரும் காதினன் - செவ்விய அரையினையுடைய அசோகினது குளிர்ந்த தளிர் அசையும் காது பொருந்தி,

கச்சினன் - கச்சைக் கட்டி,

கழலினன் - கழலை அணிந்து,

செச்சைக் கண்ணியன் - வெட்சிமாலையைச் சூடி,

குழலன் - குழலை ஊதி,

கோட்டன் - கொம்பைக் குறித்து,

குறும் பல்லியத்தன் - சிறிய வாத்தியங்களை இயம்பி,

தகரன் - ஆட்டுக்கடாவைப் பின்னிட்டு,

மஞ்ஞையன் - மயிலின்மேலேறி,

புகர் இல் சேவல் அம் கொடியன் - குற்றமில்லாத கோழிக் கொடியை உயர்த்து,

நெடியன் - (பிள்ளையாய் இராமல்) நெடுக வளர்ந்து,

தொடி அணி தோளன் - தோளிலே தொடியை அணிந்து,

மருங்கில் கட்டிய குறும்பொறிக் கொண்ட - இடையிலே இறுகக் கட்டிய உதரபந்தனத்தின்மேலே உடுப்பதாக உட் கொண்ட

நிலன் நேர்பு நறும் தண் சாயல் துகிலினன் - (நாலவிட்டமையால்) நிலத்தைப் பொருந்திய நறிய குளிர்ந்த மென்மை யையுடைய புடைவையை உடுத்து,

நரம்பு ஆர்த்து அன்ன இன் குரல் தொகுதியொடு தலைத் தந்து - யாழ்நரம்பு ஆரவாரித்தாற் போன்ற இனிய மிடற்றோசையையுடைய பாடுமகளிரது கூட்டத்துடனே திரிந்து,

மென்றோட் பல்பிணை முழவு உறழ் தடக்கையின் தழீஇ இயல ஏந்தி - மெல்லிய தோளையுடைய மான்பிணைபோலும்

பலபெண்களை முழவைப்போலும் தம்முடைய பெரிய கையி னாலே தழுவிப் பொருந்தும்படி எடுத்துக்கொண்டு,

குன்றுதோறு ஆடலும் நின்ற தன் பண்பு - மலைகள் தோறும சென்று விளையாடுதலும் தமக்கு நிலைநின்ற குணமாம்.

வேடர்கள் உண்டு மகிழ்ந்து, பெண்களோடும குரவைக் கூத்தாட; சூடி, உடையராய், உடுத்து, காது பொருந்தி, கட்டி, அணிந்து, சூடி, ஊதி, குறித்து, இயம்பி, பின்னிட்டு, ஏறி, உய ர்ந்து, வளர்ந்து, அணிந்து, உடுத்து, திரிந்து, பெண்களைத் தழுவி எடுத்துக்கொண்டு, மலைகள் தோறும் சென்று விளையாடுதலும் தமக்கு நிலைநின்ற குணமாம் என முடிக்க.

அதா அன்று - அதுவன்றி,

---

ஆறுவது

# பழமுதிர்சோலை.

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
யூரூர் கொண்ட சீர்கெழு விழவினு
மார்வல ரேத்த மேவரு நிலையினும்
வேலன் றைஇய வெறியயர் களனுங்
காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு

மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர
நெய்யோ டையவி யப்பியை துரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொ ளுருவி னிரண்டுடை யுடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇத் தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையுற வறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
யிமிழிசை யருவியோ டின்னியங் கறங்க
வுருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகண்
முருகிய நிறுத்து முரணின ருட்க
முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனக
ராடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி
யோடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
வாண்டாண் டுறைதலு மறிந்த வாறே
யாண்டாண் டாயினு மாகக் காண்டக
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி

நெடும்பெருஞ் சிமயத்து நீலப் பைஞ்சுனை
யைவரு ளொருவ னங்கை யேற்ப
வறுவர் பயந்த வாறமர் செல்வ
வால்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகண் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
விழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவிற் றானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவி லொருவ பொருவிறன் மள்ள
வந்தணர் வெறுக்கை யறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்த ரேறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே
யருமபெறன் மரபிற் பெரும்பெயர் முருக
நசையினர்க் கார்த்து மிசைபே ராள
வலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்று டகலத்துப்
பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேள்
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்
சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந குரிசி லெனப்பல
யானறி யளவையி னேத்தியா னாது
நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையி

னின்னடி யுள்ளி வந்தனை னின்னொடு
புரைகுந ரில்லாப் புலமை யோயெனக்
குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்
வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
யளியன் றானே முதுவா யிரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
வினியவு நல்லவு நனிபல வேத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்றோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
யணங்குசா லுயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
யஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென
வன்புடை நன்மொழி யளைஇ விளிவின்
றிருணிற முந்நீர் வளைஇய வுலகத்
தொருநீ யாகத் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசி னல்குமதி பலவுடன்
வேறுபஃ றுகிலி னுடங்கி யகில்சுமந்
தார முழுமுத லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
தண்கமழ் மலரிறால் சிதைய நன்பல
வாசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமல ருதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுத
விரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று

முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப்பொன் கொழியா
வாழை முழுமுத றுமியத் தாழை
யிளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை யிரியக் கேழலோ
டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்
டாமா நல்லேறு சிலைப்பச் சேணின்
றிழுமென விழிதரு மருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

இதன்பொருள்.

சிறுதினை என்பது தொடுத்துக் கந்துடை நிலையினும் என்னும் வரையும் ஒருதொடர்.

சிறுதினை மலரொடு விரைஇ மறி அறுத்து - சிறிய தினை யரிசியைப் பூக்களுடன் கலந்து (பிரப்பரிசியாகவைத்து) மறியை அறுத்து,

வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ - கோழிக்கொடி யுடனே தாம் அவ்விடத்தில் நிற்கும்படி நிறுத்தி,

ஊர் ஊர் கொண்ட சீர் கெழு விழவினும் - ஊர் தோறும் ஊர் தோறும் எடுத்துக் கொண்ட சிறப்புப் பொருந்திய திருவிழாவினும்,

ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும் - தம்மேல் அன்புடையவர்கள் துதித்தலால் (தமது திருவுளம்) விரும்பிய இடத்திலும்,

வேலன் தைஇய வெறி அயர் களனும் - படிமத்தான் செய்த வெறியாடுகளத்திலும்,

முருகக்கடவுளுக்கு அடையாளமாக வேலைக்கொண்டு திரிதலால் படிமததானை வேலன் என்றார்.

காடும் - காட்டிலும்,

காவும் - சோலையிலும்,

கவின் பெறு துருத்தியும் - அழகு பொருந்திய ஆற்றிடைக் குறையிலும்,

யாறும் - நதிகளிலும்,

குளனும் - குளங்களிலும்,

வேறு பல் வைப்பும் - (முற்கூறிய ஊர்களினன்றி) வேறு பல ஊர்களிலும்,

சதுக்கமும் - நாற் சந்தியிலும்,

சந்தியும் - முச்சந்தி ஐஞ்சந்தியிலும்,

புதுப்பூங் கடம்பும் - புதுமையாகிய பூக்களையுடைய கடம்பிலும்,

மன்றமும் - ஊருக்கு நடுவே எல்லாரு மிருக்கும் மரத்தடியிலும்,

பொதியிலும் - அம்பலத்திலும்,

கந்து உடை நிலையினும் - ஆத்திண்டு குற்றியையுடைய இடத்திலும்,

(உறைதலும் உரியன்) - எழுந்தருளியிருத்தலும் உரியர்.

ஆண்டலை என்பது தொடுத்து உறைதலும்
என்னும் வரையும் ஒருதொடர்.

ஆண்டலைக் கொடியொடும் அமைவர மண்ணி - கோழிக் கொடியுடனே பொருந்த அலங்கரித்து,

ஆண்டலைக்கொடி என்பதற்குப் பேய்முதலியன பலிநுக ராமல் தலை ஆண்மகன்றலையும் உடல் பறவை வடிவுமாக எழுதிய கொடி என்று பொருள் கூறினும், பொருந்தும்.

நெய்யொடு ஐயவி அப்பி ஐது உரைத்து - நெய்யுடனே வெண்சிறுகடுகையும் (நெற்றியிலே) அப்பி (மந்திரத்தைத்) தோன்றாமல் உச்சரித்து,

குடந்தம் பட்டு - நான்குவிரல் மடக்கிப் பெருவிரல் நிறுத்தி மார்பிடை வைத்து,

கொழு மலர் சிதறி - அழகிய பூக்களைத் தூவி,

முரண் கொள் உருவின் இரண்டு உடை உடீஇ - தம் முண் மாறுகொண்ட வடிவினையுடைய இரண்டுபுடைவைகளை (உள்ளொன்று புறம்பொன்றாக) உடுத்து,

செந் நூல் யாத்து - சிவந்த நூலினாலே (கையிலே காப்புக்) கட்டி,

வெண் பொரி சிதறி - வெள்ளிய பொரியைத் தூவி,

மத வலி நிலைஇய மாத் தாள் கொழு விடைக் குருதியொடு விரைஇத் தூ வெள் அரிசி சில் பலிச் செய்து - மிகு

தியாகிய வலிமை நிலைபெற்ற பெரிய காலையுடைய கொழுவிய கடாவினது உதிரத்துடன் பிசைந்து தூயவெள்ளை யரிசியைச் சிறு பலியாக இட்டு,

பல்பிரப்பு இரீஇ - பல பிரப்புக்களையும் வைத்து,

பிரப்பாவது இதுவென்பது "கொள்கல மொன்றிற் குறுணியாகப்—பல்லுணவு பெய்து பாரிப்பது பிரப்பே" என்னுந் திவாகரச்சூத்திரத்தாலுணர்க.

சிறு பசுமஞ்சளொடு நறு விரை தெளித்து - சிறிய பசுமஞ்சளுடனே நறிய சந்தன முதலியவற்றையுந் தெளித்து,

விரை ஆகுபெயர்.

பெரும் தண் கணவீரம் நறுந் தண் மாலை துணை உற அறுத்துத் தூங்க நாற்றி - பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலையையும் நன்மையாகிய குளிர்ந்த பிற மாலைகளையும் இணையொக்க அறுத்து அசையத் தூக்கி,

நளி மலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி - செறிந்த மலைப் பக்கத்திலுள்ள நன்மையாகிய ஊர்களைப் (பசியும் பிணியும் பகையும் நீங்குக வென்று) வாழ்த்தி,

நறும் புகை எடுத்துக் குறிஞ்சிபாடி - நறியதூபங்கொடுத்து அந்நிலத்துக்குரிய குறிஞ்சிப் பண்ணைப்பாடி,

இமிழ் இசை அருவியோடு இன் இயம் கறங்க - முழங்குகின்ற ஓசையையுடைய அருவியுடனே இனியவாத்தியங்கள் ஒலிக்க,

உருவப் பல்பூத் தூய் - நிறத்தினையுடைய பல பூக்களையும் தூவி,

வெருவரக் குருதிச் செந்தினை பரப்பி - (கண்டவர்களு க்கு) அச்சந் தோன்றும்படி இரத்தம் அளைந்த சிவந்த தினையைப் பரப்பி,

குறமகள் - குறப் பெண்ணானவள்,

முருகியம் நிறுத்து - தொண்டகப் பறையை வாசிக்கப் பண்ணி,

முரணினர் உட்க முருகு ஆற்றுப் படுத்த உரு கெழு வியன் நகர் - (ஆத்திகருக்கு) மாறுபடுதலையுடைய நாத்திகர் கள் அஞ்சும்படி முருகக்கடவுளாகிய தாம் வரும்பொருட்டு வழிப்படுத்திய அச்சம் பொருந்திய பெருமையாகிய ஊரின் கண்ணே,

ஆத்திகா இவர் நாத்திகர் இவரென்பது "பொன்னுலகம வெந்நரகம் புண்ணியபா வம்புரிவார்—நின்மலனு முண்டென்று நிச்சயித்தா - ரிந்நிலைமை—யாத்திகரே யார்கண்டா ரம்மைப் பலமென்பார்—நாததிகரென் றேயுளத்து ளூடு" என்னும் வெண் பாவால் அறிக. குறப்பெண்ணானவள் அலங்கரிதது, அப்பி, உச்சரித்து, வைதது, தூவி, உடுதது, கட்டி, தூவி, இட்டு, வைத்து, தெளிதது, தூக்கி, வாழ்த்தி, பாடி, ஒலிக்கத்தூவி, பர ப்பி, வாசிக்கப்பண்ணி, வழிப்படுத்திய ஊர் என முடிக்க.

ஆடு களம் சிலம்பப் பாடி - அவ்வெறியாடுகளம் ஆரவா ரிக்க (அதற்கு ஏற்பனவற்றைப்) பாடி,

கோடு பல உடன் வாய் வைத்து - கொம்புகள் பலவற்றை யும் சேர ஊதி,

கொடு மணி இயக்கி - கொடியமணியை ஒலிப்பித்து,

ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி - (வலிமை) நீங்காத பிணிமுகம் என்னும் பட்டத்தையுடைய யானையை வாழ்த்தி,

பூட்கைப் பிணிமுகம் என்பதற்கு யானையையும் மயிலையும் எனப் பொருளுரைப்பினும் பொருந்தும்.

வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட - தம்மை விரும்புகின்றவர்கள் வரங்களை விரும்பியபடியே பெற்று நின்று வழிபட,

ஆண்டு ஆண்டு உறைதலும் (உரியன்) - அவ்விடத்திலே (அவரை) ஆட்கொண்டு எழுந்தருளியிருத்தலும் உரியர்.

ஊரின்கண்ணே பாடி, ஊதி, ஒலிப்பித்து, வாழ்த்தி வழிபட, ஆட்கொண்டு எழுந்தருளியிருத்தலும் உரியர் என முடிக்க.

## அறிந்த என்பது தொடுத்து அளவையில் என்னும் வரையும் ஒருதொடர்.

அறிந்த ஆறே ஆண்டு ஆண்டு ஆயினும் ஆக - (நான் உனக்கு) அறிவித்த படியே அவ்வவ்விடங்களிலே ஆயினுமாக (பிறவிடங்களிலே ஆயினுமாக)

அறிவித்த எனற்பாலது பிறவினைப் பொருளுணர்த்தும் விவ்விகுதி கெட்டு அறிந்த என்றுயிற்று. "நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்—குற்றமு மாங்கே தரும்." என்னுந் திருக்குறளினுள் பொன்றுவித்து எனற்பாலது பொன்றி என்றுயவாறுபோல. இவ்வாறு வருவனவற்றை வடநூலார் அந்தர்ப்பாவிதணிச்சு என்பர். உம்மை ஐயவும்மை.

மூந்துநீ கண்டுழிக் காண் தக முகன் அமர்ந்து ஏத்தி - முற்பட நீ கண்டபொழுது அழகு தகும்படி முகமலர்ந்து துதித்து,

முருகக்கடவுளது தெய்வத்தன்மையைக் கண்டபொழுது அச்சமின்றி நிற்றல்வேண்டுமென்பார் முகனமர்ந்து என்றார்.

கை தொழூஉப் பரவி - பின்பு கையைத் தலையிலே குவித்து வாழ்த்தி,

கால் உற வணங்கி - பின்பு அவருடைய திருவடிகள் (உன்னுடைய தலையிலே) படும்படி வணங்கி,

நெடும் பெரும் சிமயத்து நீலப் பைஞ் சுனை - நெடிய பெரிய இமயமலைச் சாரலிலிருக்கின்ற கருங்குவளைகளையுடைய பசிய சரவணப் பொய்கையானது,

ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப - (பிருதிவி அப்புத் தேயு வாயு ஆகாயம் என்னும்) ஐவருள் ஒருவனாகிய அக்கினிதேவனது அழகிய கையினின்றுந் தன்னிடத்தே ஏற்க,

பஞ்சபூதங்களும் பிரமா விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்னும் பஞ்சகர்த்தாக்களையும் தெய்வமாக உடைமையால், அவ்வொற்றுமைபற்றி அவைகளை ஐவர் என்றார். சிவனது நெற்றிக்கண்ணினின்றும் தோன்றிய தீப்பொறிகளாறையும் அக்கினிதேவன் கங்கையிலே கொண்டுசென்றுய்ப்ப அது சரவணப் பொய்கையிலே யிட்டமைபற்றி ஒருவனங்கையேற்ப என்றார்.

அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ - கார்த்திகைப் பெண்களறுவர் பாலூட்டி வளர்த்த ஆறுவடிவங்களும் (உமாதேவி யெடுக்கும்பொழுது) ஒன்றாய் இசைந்த செல்வரே,

ஆல் கெழு கடவுள் புதல்வ - கல்லால மரநிழலின்கீழே (தக்ஷிணாமூர்த்தியாயிருந்த) பரமசிவனுடைய புதல்வரே,

மால் வரை மலைமகள் மகனே - பெருமையாகிய மூங்கில் களையுடைய இமயமலையரசனுக்கு மகளாகிய உமாதேவியினு டைய குமாரரே,

மாற்றோர் கூற்றே - பகைவராகிய அசுரர்களுக்கு யமனே,

போர் வெல் வெற்றிக் கொற்றவை சிறுவ - (மகிடா சுரனை) யுத்தத்திலே வென்ற வெற்றியினையுடைய துர்க்கைக் குப் புதல்வரே,

இழை அணி சிறப்பிற் பழையோள் குழவி - ஆபரண த்தை அணிந்த சிறப்பையுடைய காடுகிழாளது குமாரரே,

காடுகிழாள் என்பது இக்காலத்தே காடுகாள் என மருவி ற்று. இவளும் சிவனுடைய சத்தியாதலால், இவள் குழவி என்றார்.

வணங்கு வில் வானோர் தானைத் தலைவ - வளைந்த வில்லி னையுடைய தேவசேனாதிபதியே,

மாலைமார்ப - மாலையையணிந்த மார்பினையுடையவரே,

நூல் அறி புலவ - (வேதாகமமுதலிய எல்லா) நூல்களை யும் உணர்ந்த பண்டிதரே,

செருவில் ஒருவ - போர்த்தொழிலிலே ஒருவராய் நிற்பவரே,

பொரு விறல் மள்ள - பொருகின்ற வெற்றியினையுடைய இளையவரே,

அந்தணர் வெறுக்கை - (உயிர்கள்மேல்) அழகிய தண்ண ளியையுடையவர்களுக்குச் சேமநிதியே,

அறிந்தோர் சொல் மலை - (வேதாகமமுதலிய சாத்திரங்களை) அறிந்த மெய்யறிவுடையவர்களாலே சொல்லப்படும் புகழாகிய மலையையுடையவரே,

அசையாமையும் பெருமையும்பற்றி அப்புகழ் மலையாக உருவகஞ் செய்யப்பட்டது. சொன்மலை அன்மொழித்தொகை.

மங்கையர் கணவ - (தெய்வயானையம்மை வள்ளிநாயகியென்னும்) பெண்களுக்கு நாயகரே,

மைந்தர் ஏறே - வலிமையுடையாருக்கு இடபமே,

வேல் கெழு தடக்கைச் சால் பெருஞ் செல்வ - வேலாயுதம் பொருந்திய பெருமையாகிய கையினையுடைய நிறைந்த பெருஞ்செல்வரே,

குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து விண்பொரு நெடு வரைக் குறிஞ்சிக் கிழவ - கிரவுஞ்ச கிரியைப் பிளந்த குறையாத வெற்றியையுடைய தேவருலகத்தைப் பொருந்திய நெடிய மலைகளையுடைய குறிஞ்சிநிலத்திற்கு உரியவரே,

பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே - பலரும் புகழ்கின்ற நன்மையாகிய சொற்களையுடைய பரசமயபண்டிதர் (களாகிய யானை) களுக்குச் சிங்கவேறுபோல்பவரே,

பெறல் அரும் மரபிற் பெரும் பெயர் முருக - பிறராலே பெறுதலரிய முறைமையினையுடைய பெரும்பொருளாகிய வீட்டினையுடைய முருகரே,

பெயரென்றது பொருள் பெற்ற பெயர். அதனையுடைய பொருளைப் பெயரென்றார்.

நசையினர்க்கு ஆர்த்தும் பேர் இசை ஆள - (அவ்வீட் டின்மேல்) ஆசையுடையவர்களுக்கு அதனை நுகர்விக்கும் பெரிய புகழை ஆளுதலுடையவரே,

அலந்தோர்க்கு அளிக்கும் (சேஎய்) - (பிறராலே) இடுக் கண்பட்டு வந்தவர்களுக்கு அருள் செய்யுஞ் சேயே,

மண்டு அமர் கடந்த வென்று ஆடு நின் அகலத்துப் பொலம் பூட்சேஎய் - மிக்குச் செல்கின்ற போர்களை முடித்த வென்று ஆடுகின்ற உம்முடைய மார்பினிடத்தே பொன்னு லாகிய ஆபரணங்களை அணிந்த சேயே,

பரிசிலர்த் தாங்கும் உரு கெழு நெடு வேள் - இரப்பவரை (வேண்டுவன கொடுத்துப்) பாதுகாக்கும் நிறம்பொருந்திய நெடிய வேளே,

பெரியோர் ஏத்தும் பெரும் பெயர் இயவுள் - (தேவர்க ளும் முனிவர்களுமாகிய) பெரியவர்கள் துதிக்கும் பெரிய திருநாமத்தையுடைய கடவுளே,

சூர் மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி - சூரனுடைய குலத்தை நாசமாக்கிய வலிமையினால் உண்டாகிய மதவலி என்னும் பெயரையுடையவரே,

போர் மிகு பொருந - யுத்தத்தில் மிக்க திண்ணியரே,

குரிசில் - பெருமையிற் சிறந்தவரே,

என யான் அறி அளவையினும் ஆறாது பல ஏத்தி - என்று நான் உனக்கு அறிவித்த அளவினாலும் (நீயறிந்த அளவினாலும்) நீங்காது பலவற்றையுங் கூறிப்புகழ்ந்து,

குறிசிலுமென்ற உம்மை அளவையின் என்பதனோடு கூட்டப்பட்டது.

நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமையின் நின் அடி உள்ளி வந்தனென் நின்னொடு புரைநர் இல்லாப் புலமையோய் எனக் குறித்தது மொழியா அளவையில் - உம்முடைய தன்மைகளெல்லாவற்றையும் முற்ற அளவிட்டு அறிதல் நிலைபெற்ற உயிர்களுக்கு அரிதாகையால் உம்முடைய திருவடியைப் (பெறல்வேண்டுமென்று) நினைந்து வந்தேன் உம்மோடு ஒப்பவர் இல்லாத மெய்ஞ்ஞானத்தையுடையவரே என்று நீ கருதிய வீடுபேற்றை விண்ணப்பஞ் செய்வதற்கு முன்னே,

## குறித்து என்பது தொடுத்து ஏத்தி என்னும் வரையும் ஒருதொடர்.

வேறு பல் உருவிற் குறும் பல் கூளியர் உடன் குறித்து - வெவ்வேறாகிய பல வடிவினை உடைய சிறிய பலராகிய பரிசனர்கள் சேரக் கருதி,

சாறு அயர் களத்து வீறு பெறத் தோன்றி - திருவிழாவை எடுத்த களத்திலே தாங்கள் பொலிவு பெறத் தோன்றி,

பெரும முது வாய் இரவலன் நின் வண் புகழ் நயந்து இனியவும் நல்லவும் நனி பல ஏத்தி வந்தோன் அளியன் தானே என - பெருமையை உடைய சுவாமீ அறிவு முதிர்ந்த வாயினையுடைய புலவனொருவன் உம்முடைய வளம் பொருந்திய புகழை விரும்பிக் (கேட்டோர்களுக்கு) இனியனவும் உறுதி பயப்பனவுமாக மிக்க பலவற்றை வாழ்த்தி

வந்தான் ஆதலால் அவன் உம்மாலே காக்கப்படத்தக்கவன் என்று கூற,

பரிசனர்கள் கருதித் தோன்றிக் கூற என முடிக்க.

## தெய்வம் என்பது தொடுத்து நல்குமதி என்னும் வரையும் ஒருதொடர்.

தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின் வான் தோய் நிவப்பின் தான் வந்து எய்தி - தெய்வத்தன்மை அமைந்த வலிமை விளங்கும் வடிவையும் ஆகாயத்தைத்தீண்டும் உயர்ச்சியையுமுடைய தாம் வந்து சேர்ந்து,

அணங்கு சால் உயர்நிலை தழீஇ - (கண்டவர்களுக்கு) அச்சம் பொருந்தும் தெய்வத்தன்மையை உள்ளடக்கிக் கொண்டு,

மணம் கமழ் தெய்வத்துப் பண்டைத் தன் இளநலம் காட்டி - வாசம் கமழ்கின்ற தெய்வத்தன்மையை உடைய முன்பு உண்டாகிய தம்முடைய இளைய வடிவத்தைக்காட்டி,

நின் வரவு அறிவல் அஞ்சல் ஓம்புமதி என அன்பு உடை நல் மொழி அளைஇ - (முத்திபெற நினைந்து வந்த) நின்வரவை யாம் அறிவேம் (அது உனக்கு எய்துதல் அரிதென்று) அஞ்சுதலைப் பரிகரி என்று உன் மேல் அன்பினையுடைய நல்ல வார்த்தைகளைப் பலதரமும் கலந்து பேசி,

மதி முன்னிலையசைச்சொல்.

இருள நிற முந்நீர் வளைஇய உலகத்து ஒரு நீ ஆக வெள்வு இன்று தோன்ற - இருண்ட நிறத்தையுடைய கடல்சூழ்ந்த

உலகத்தின்கண்ணே நீ யொருவனே (பிறருக்கு வீடளித் தற்கு உரியவ) னாகக் கேடின்றித் தோன்றும்படி,

இன்றி என்பது இன்று எனத் திரிந்து நின்றது.

விழுமிய பெறல் அரும் பரிசில் நல்கும் மதி - சிறப்பினை யுடைய பிறராலே பெறுதற்கரிய திருவருளாகிய பரிசிலைத் தந்தருளுவார்.

மதி படர்க்கையில் வருதல் புறனடையாற் கொள்க.

## பலவுடன் என்பது தொடுத்து மலைகிழவோனே என்னும் வரையும் ஒருதொடர்.

வேறு பல் துகிலின் பலவுடன் நுடங்கி - வேறுபட்ட பலவாகிய துகிற்கொடிகள் போலத் தாம் பலவுங் கூட அசைந்து,

அகில் சுமந்து - அகில்களை மேலே கொண்டு,

ஆர முழு முதல் உருட்டி - சந்தனமாகிய பெரிய மரங் களைத் தள்ளி,

வேரற் பூ உடை அலங்கு சினை புலம்ப வேர் கீண்டு - சிறுமூங்கிலினது பூவையுடைய அசைகின்ற கொம்புகள் தனிப்ப வேரைப் பிளந்து,

விண் பொரு நெடுவரைப் பரிதியின் தொடுத்த தண்கமழ் மலர் இறால் சிதைய - ஆகாயத்தைத் தீண்டுகின்ற நெடிய மலையிடத்தே சூரியனது மண்டலத்தைப் போல வைக்கப் பட்ட குளிர்ச்சியையுடைய மணக்கின்ற பெரிய தேன்கூடு கள் கெடும்படிக்கும்,

நன் பல ஆசினி முது சுனை கலாவ - நன்மையாகிய பல ஆசினிகளுடைய முற்றிய சுனைகள் தம்மிடத்தே கலக்கும் படிக்கும்,

மீ மிசை நாக நறுமலர் உதிர - மலையினது உச்சியில் உண்டாகிய சுரபுன்னையின் நறிய பூக்கள் உதிரும் படிக்கும்,

யூகமொடு மா முக முசுக்கலை பனிப்ப-கருங்குரங்குடனே கருமையாகிய முகத்தையுடைய ஆண்முசுக்களும் நடுங்கும் படிக்கும்,

பூ நுதல் இரும் பிடி குளிர்ப்ப வீசி - புகர் பொருந்திய மத்தகத்தையுடைய பெரிய பிடிகள் குளிரும்படிக்கும் வீசி,

பெரும் களிற்று முத்து உடை வான் கோடு தழீஇ - பெரிய யானையினது முத்தையுடைய பெரிய கொம்புகளை உள்ளடக்கி,

நன் பொன் மணி நிறம் கிளரத் தத்துற்று - நன்மையாகிய பொன்னும் இரத்தினமும் நிறம் விளங்கும்படி மேலே கொண்டு குதித்து,

பொன் கொழியா - (பொடியாகிய) பொன்னைக் கரையொதுக்கி,

வாழை முழு முதல் துமியத் தாழை இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கி - வாழையினது பெரிய முதல் துணியும்படிக்கும் தெங்கினது சிறப்புப் பொருந்திய இளநீர்க்குலைகள் உதிரும்படிக்கும் மோதி,

கறிக்கொடிக் கருந்துணர் சாய - மிளகுகொடியினது கரிய பூங்கொத்துக்கள் சாயும்படிக்கும்,

பொறிப் புற மடநடை மஞ்ஞை பலவுடன் கோழி வயப் பெடைவெரீஇ இரிய - பீலி பொருந்திய இடத்தையும் மடப்பம்பொருந்திய நடையையுமுடைய மயில்கள் பலவற்றோடு வலிமையாகிய கோழிப்பெடைகள் அஞ்சி ஓடும்படிக்கும்,

கேழலோடு வெளிற்றின் இரும்பனைப் புன்சாய் அன்ன குரூஉ மயிர் யாக்கைக் குடாவடி உளியம் பெருங் கல் விடர் அளைச் செறிய - ஆண்பன்றியுடனே உள்ளே வெளிற்றினையுடைய பனையினது புல்லிய செறும்பைப்போன்ற கருநிறம் பொருந்திய மயிரினையுடைய சரீரத்தையும் வளைந்த வடிவினையுமுடைய கரடிகள் பெரிய கல் விண்ட முழைகளிலே சேரும்படிக்கும்,

கருங் கோட்டு ஆமா நல்லேறு சிலைப்ப-கரிய கொம்புகளையுடைய நன்மையாகிய ஆண்காட்டாக்கள் முழங்கும்படிக்கும்,

சேண் நின்று இழுமென இழிதரும் அருவி - மலையுச்சியில் நின்றும் இழுமென்னும் ஓசைபடக் குதிக்கும் அருவிகளையுடைய, .

அசைந்து மேலேகொண்டு, தள்ளி, பிளந்து, கெடும்படிக்கும் கலக்கும்படிக்கும் உதிரும்படிக்கும் நடுங்கும்படிக்கும் குளிரும்படிக்கும் வீசி, உள்ளடக்கி, குதித்து, ஒதுக்கி, மோதி, சாயும்படிக்கும் ஓடும்படிக்கும் சேரும்படிக்கும் முழங்கும்படிக்கும் குதிக்கும் அருவிகள் என முடிக்க.

பழமுதிர்சோலை மலை கிழவோன் - பழமுதிர்சோலை மலைக்கு உரியவராகிய அம்முருகக்கடவுள் என்றவாறு.

பழமுதிர்சோலை மலைகிழவோன் என உடம்பொடுபுணர்த்தமையால், பழமுதிர்சோலையின்கண்ணே எழுந்தருளியிருத்தலும்

உரியர் என முன்னர்க் கூட்டிக்கொள்க. உடம்பொடுபுணர்த்தல் என்பது ஒருதந்தி. அது தொல்காப்பியமரபியலிற் காண்க.

## இதனது தாற்பரியம்.

சுப்பிரமண்ணியசுவாமியுடைய திருவடிகளைச் சிந்திக்கும் தலைமைபெற்ற உள்ளத்துடனே புண்ணியங்களை விடாது செய்யும் கோட்பாட்டினாலே விளையாநின்ற மெய்ஞ்ஞானத்தைச் சாதித்து அத்திருவடிக்கீழ் இருக்கும் நெறியை நீ விரும்பினையானால், நீ முற்பிறப்பிலே நினைந்து செய்த புண்ணியங்களினாலே அநித்தியமாகிய இம்மை மறுமையின்பங்கள் பலவற்றையும் உவர்க்கின்ற நன்மையாகிய மனசிலே கிளர்ந்த இனிமையாகிய இந்த மோக்ஷவிச்சையினாலே சிவஞானம் இப்போதே வாய்க்க அது காரணமாக முத்தியைப் பெறுவாய். நீ பரமசற்குருநாதராகிய அக்கடவுளை அடைந்து வழிபட்டே அதனைப் பெறவேண்டுகையால், அவர் விசேஷமாக எழுந்தருளியிருக்கும் புண்ணியஸ்தலங்களைச் சொல்வேன்; கேள். அவர் திருப்பரங்குன்றின் கண்ணே எழுந்தருளியிருத்தலும் உரியர்: அதுவன்றி, திருச்செந்தூருக்கு எழுந்தருளுதலும் அவருக்கு நிலைபெற்றகுணம்: அதுவன்றி, திருவாவினன்குடியின்கண்ணே எழுந்தருளியிருத்தலும் உரியர்: அதுவன்றி, திருவேரகத்தின்கண்ணே எழுந்தருளியிருத்தலும் உரியர்: அதுவன்றி, மலைகள்தோறும் விளையாடுதலும் தமக்கு நிலைநின்ற குணமாம்: அதுவன்றி, ஊர்தோறும் ஊர்தோறும் எடுத்துக்கொண்ட திருவிழாவிலும், தம்மேல் அன்புடையவர்கள் துதித்தலால் தமது திருவுளம் விரும்பிய இடத்திலும், படிமத்தான் செய்த வெறியாடுகளத்திலும், காட்டிலும், சோலையிலும்,

ஆற்றிடைக்குறையிலும், நதிகளிலும், குளங்களிலும்,வேறு பல ஊர்களிலும், நாற்சந்தியிலும், முச்சந்தி ஐஞ்சந்திகளிலும், கடம்பிலும், ஊருக்கு நடுவே எல்லாருமிருக்கும் மரத்தடியிலும், அம்பலத்திலும், ஆத்தீண்டுகுற்றியையுடைய இடத்திலும், எழுந்தருளியிருத்தலும் உரியர்: அதுவன்றி, குறப்பெண்ணுனவள் தாம் வரும்பொருட்டு வழிபடுத்திய ஊரின்கண்ணே தம்மை விரும்புகின்றவர்கள் வரங்களை விரும்பியபடியே பெற்றுநின்று வழிபட அவ்விடத்திலே அவரை ஆட்கொண்டு எழுந்தருளியிருத்தலும் உரியர்: நான் உனக்கு அறிவித்தபடியே அவ்வவ்விடங்களிலே ஆயினுமாக பிறவிடங்களிலே ஆயினுமாக; முற்பட நீ கண்டபொழுது முகமலர்ந்து துதித்து, பின்பு கையைத் தலையிலே குவித்து வாழ்த்தி, பின்பு அவருடைய திருவடிகள் உன்னுடைய தலையிலே படும்படி வணங்கி,—என்று நான் உனக்கு அறிவித்த அளவினுலும் நீ அறிந்த அளவினுலும் நீங்காது பலவற்றையுங்கூறிப் புகழ்ந்து, உம்முடைய தன்மைகளெல்லாவற்றையும் முற்ற அளவிட்டறிதல் உயிர்களுக்கு அரிதாகையால் 'உம்முடைய திருவடியைப் பெறல்வேண்டுமென்று நினைந்து வந்தேன் உம்மோடு ஒப்பவர் இல்லாத மெய்ஞ்ஞானத்தையுடையவரே' என்று நீ கருதிய வீடுபேற்றை விண்ணப்பஞ் செய்வதற்கு முன்னே, அவருடைய பரிசனர்கள் சேரக்கருதித் தோன்றி, 'சுவாமீ அறிவு முதிர்ந்த வாயினையுடைய புலவனொருவன் உம்முடைய புகழை விரும்பிக் கேட்டோர்களுக்கு இனியனவும் உறுதிபயப்பனவுமாக மிக்க பலவற்றை வாழ்த்தி வந்தான் ஆதலால் அவன் உம்மாலே காக்கப்படத்தக்கவன்' என்று கூற, பழமுதிர் சோலைமலைக்கு உரியவராகிய அம்முருகக்கடவுள் வந்து

சேர்ந்து அச்சம் பொருந்தும் தெய்வத்தன்மையை உள்ள டக்கிக்கொண்டு, தம்முடைய இளையவடிவத்தைக் காட்டி 'முத்திபெற நினைந்து வந்த நின்வரவை யாம் அறிவேம் அது உனக்கு எய்துதல் அரிதென்று அஞ்சுதலைப் பரிகரி' என்று உன்மேல் அன்பினையுடைய நல்லவார்த்தைகளைப் பலதரமும் கலந்துபேசி, உலகத்தின்கண்ணே நீயொருவனே பிறருக்கு வீடளித்தற்கு உரியவனாகக் கேடின்றித் தோன் றும்படி திருவருளாகிய பரிசிலைத் தந்தருளுவார் என்பதாம்.

இதனால், முத்தியைப் பெற்றவனொருவன் பெறுதற்குப் பக்குவனாகிய ஓரிரவலனைப் பெறும்பொருட்டு முருகக்கடவுளிடத்தே வழிப்படுத்ததாக இப்பிரபந்தம் செய்யப்பட்டமை தெளிக.

திருமுருகாற்றுப்படையுரை முற்றிற்று.

---

## நேரிசைவெண்பா.

குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையா—யென்று
மிளையா யழகியா யேறூர்ந்தா னேறே
யுளையாயென் னுள்ளத் துறை.

குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவு
மன்றங் கமரரிடர் தீர்த்ததுவு—மின்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல்.

வீரவே றாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வே டிருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
துளைத்தவே லுண்டே துணை.

இன்ன மொருகா லெனதிடும்பைக் குன்றுக்குக்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.

உன்னை யொழிய வொருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே.

அஞ்சு முகந்தோன்றி லாறு முகந்தோன்றும்
வெஞ்சமரந்தோன்றில் வேறொன்று—நெஞ்சி
லொருகா னினைக்கி லிருகாலுந் தோன்று
முருகாவென் றோதுவார் முன்.

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—யொருகைமுகன்
றம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுது
நம்பியே கைதொழுவே னான்.

வேலுமயிலுந்துணை.

